ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த

# மாணிக்க மாலை.

"தைவாதீநம் ஜகத் ஸர்வம் மந்த்ராதீநந்து தைவதம், தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம் தஸ்மாத் ப்ராஹ்மணதைவதம்" என்கிறபடியே உபயவிபூதியும் ஈச்வரனிட்ட வழக்காயிருக்கும். ஈச்வரன் திருமந்த்ரம் இட்ட வழக்காயிருக்கும். திருமந்த்ரம் ஆசார்யனிட்ட வழக்காயிருக்கும். ஆகையாலே, உபயவிபூதிக்கும் நிர்வாஹகனான ஈச்வரனும் அவனை ப்ரதிபாதிக்கிற திருமந்த்ரமும் ஆசார்யனிட்ட வழக்காகையாலே திருமந்த்ரத்தால் ப்ரதிபாதிக்கிற ப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஆசார்யனாலே என்னத்தட்டில்லை.

ஆசார்யனாவான்: "ஆசார்யோ வேதஸம்பந்நோ விஷ்ணுபக்தோ விமத்ஸர:, மந்த்ரஜ்ஞோ மந்த்ரபக்தச்ச ஸதா மந்த்ராச்ரயச் சுசி:" "குருபக்திஸமாயுக்த: புராணஜ்ஞோ விசேஷத:, ஏவம் லக்ஷணஸம்பந்நோ குருரித்யபிதீயதே." என்கிறபடியே வைதிகாக்ரேஸரனாய், பகவத்பக்தியுக்தனாய், மாத்ஸர்யவியுக்தனாய், ஸகலவேதஸாரபூதமாய் ஸகலமந்த்ரங்களுக்கும் காரணமாய் இரண்டு பங்குக்கு ஒரு கையோலை போலே எம்பெருமானோடு இவ்வாத்மாவுக்கு உண்டான அவிநாபூதஸம்பந்தத்தைக் காட்டக்கடவதாய் முமுக்ஷுவுக்கு எப்பொழுதும் வைப்பான திருமந்த்ரத்தை பக்திச்ரத்தைகளோடே அர்த்தஸஹிதமாக அநுஸந்தித்துப் பெரிய மதிப்பனாய், அர்த்தகாமோபஹதனன்றிக்கே லோகபரிக்ரஹம் உடையவனாயிருப்பானொருவன் ஆசார்யனாகக்கடவன்.

கூரத்தாழ்வான் எம்பெருமானார் திருவுள்ளத்திலே சீறியருளினதொன்று கேட்டு "இவ்வாத்மா அவருக்கே சேஷமாயிருந்ததாகில் அவருடைய இஷ்டவிநியோக ப்ரகாரம் கொண்டு கார்யமென்" என்றார். தன்னை ஆச்ரயித்துவைத்துத் தன் திறத்திலே தீங்கு நினைத்து த்ரோஹியான நாலூரானைப் பெருமாள் "க்ஷமாமி" என்று முனிந்தருள, பெருமாளோடே எதிரிட்டு "அவன் நான் பெற்ற லோகம் பெறவேணும்" என்று விண்ணப்பம் செய்தார். ஆக, இவ்விரண்டர்த்தத்தாலும் சிஷ்யாசார்ய க்ரமத்துக்கு ஸீமாபூமி கூரத்தாழ்வானென்று அருளிச்செய்வர். வடுகநம்பி "ஆசார்யபதமென்று தனியே ஒரு பதம்; அதுள்ளது எம்பெருமானாருக்கே யாயிற்று; ஆகையால் எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று விச்வஸித்திருங்கோள்" என்றாயிற்று, தம்முடைய சிஷ்யர்களுக்கு அருளிச்செய்வது.



நல்லடிக்காலத்தில் நம்மாசார்யர்கள் அதிகாரிகளைப் பெற்றாலல்லது பகவத்ஸம்பந்தம் இருக்கும்படி சொல்லக்கடவதாயிராது. அதிகாரிகளாவார்: கருந்தரையில் தாங்கள் நின்ற நிலையை அநுஸந்தித்து "இந்நின்ற நீர்மை இனியா முறாமை" என்றும், "இன்றொடு நாளையென்றே எத்தனை காலமும் போயக் கிறிப்பட்டேன்" என்றும், "ஏஹி பச்ய சரீராணி" என்றும் "இன்னம் கெடுப்பாயோ" என்றும் "இவையென்ன உலகியற்கை" என்றும் "நாட்டுமானிடத்தோடெனக்கரிது" என்றும், "நாட்டாரோடியல்வொழிந்து" என்றும்

"ஓ! ஓ! உலகினதியல்வே" என்றும், கூவி வெருவி இந்நிலத்திற்பொருந்தாமை தோற்றத் திவண்ட சேதனனுக்காயிற்று பகவத்ஸம்பந்தம் சொல்லுவது. அங்ஙனன்றிக்கே, வாய்க்கரையிலே பொரிபுறந்தடவின ஆநுகூல்யம் கண்டாதல்; த்யாஜ்யமான அர்த்தகாமங்களிலே நசையாலேயாதல், நிலை நில்லாத ஒரு ப்ரபாவத்தை நச்சியாதல், ஒன்றாலே வந்ததுவும் அவட்சியில்லாக் கழனிமுண்டர்க்கு ஒரு நல்வார்த்தை சொன்னானாகில் தன் மதிப்புங்கெட்டு, தன் கூற்றிலே ஒதுங்கின பகவத்ப்ராப்தியும் நழுவவிட முடிந்து; கேட்கிறவனையும் நாஸ்திகனாக்குகிறானித்தனை.

ஆசார்யபேதமும் ஆத்மபேதத்தோபாதி. பிதாவை, மாதுலனை, மாமனாரை, ஸாவித்ர்யுபதேசம் பண்ணினவனை, அத்யயநம் பண்ணுவித்தவனை, ஒரு மந்த்ரம் உபதேசித்தவனை, பகவந்மந்த்ரம் உபதேசித்தவனை இப்படி ஆராய்ந்து பார்த்தால் அநேகராயிருப்பார்கள். இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். "இதுவென்? பகவந்மந்த்ரம் சொல்லுவித்தவனையும் அப்படிச் சொல்லலாமோ?" என்னில்: பகவதவதாரங்களும் பகவத் குணங்களும் எல்லையை என்றும் இறந்திருக்கும். பகவதவதாரங்கள் தோறும் பகவத்குணங்கள் தோறும் திவ்யசேஷ்டிதங்கள் தோறும் திருமந்த்ரங்களும் உளவாயிருக்கும். ஸம்ஸாரத்தில் ஸ்த்ரீபுமான்கள் ஸம்ச்லேஷ விச்லேஷரூபமான ஸ்ரீகோபால மந்த்ரத்தை உபதேசிப்பாரும், புத்ரப்ரதமான மந்த்ரத்தை உபதேசிப்பாரும், ஐச்வர்யமென்ன, ஆரோக்யமென்ன, விஜயார்த்தமென்ன, சத்ருநிரஸனமென்ன, இவற்றுக்குத் தக்க மந்த்ரங்களையும் உபதேசிப்பாரெல்லாம் ஸம்ஸாரத்தை வர்த்திப்பார்களாகையாலே ஆசார்யர்களாகமாட்டார்கள். இவ்வர்த்தம் திருமந்த்ரத்தைக் குறித்தன்று; விநியோகம் கொள்ளுகிற சேதனனுடைய நினைவைப் பற்ற. விபரீத ஸ்பர்சமுடைய எம்பெருமான், நீச ஸ்பர்சமுடைய மந்த்ரம், நீசஸ்பர்சமுடைய ஆசார்யன் இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். விபரீத ஸ்பர்சமுடைய எம்பெருமானாவான்:— இதரதேவாலயங்களில் இருக்குமவன். நீசஸ்பர்சமுடைய மந்த்ரமாவது:— பகவத்பாகவத கைங்கர்ய ப்ராப்திக்கு அவ்வருகுண்டான ஆபாஸங்களையச் சொல்லுமது. நீசஸ்பர்சமுடைய ஆசார்யனாவான்:—இதுக்குப் புறம்பு சில ஸம்ஸாரத்தில் மினுக்கங்களைத் தோன்றச் சொல்லுமவன்.

இனி, ஆசார்யன் ஆரென்னில்: பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபார நிவ்ருத்திரூபமான ப்ரபத்தியை உபதேசிக்கிறவன் ஆசார்யனாவான்; "ச்ரிய:பதியான எம்பெருமானையே ரக்ஷகனென்று விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்" என்று அருளிச்செய்யுமவன். ஸதாசார்யன் ஸச்சிஷ்யனை பகவத்ப்ரஸாதத்தாலே திருந்தின ஸ்ரீவைஷ்ணவனென்று மிகவும் ஆதரித்துக்கொண்டு போரும். ஸச்சிஷ்யனும் ஸதாசார்யனுடைய ஆதரத்தைக் கண்டு இறுமாவாதே தன் கருந்தரையை உணர்ந்து "பகவத்விமுகனாய் சப்தாதிவிஷயங்களிலே மண்டி உருமாய்ந்து கைகழிந்து நின்ற என்னை முசலடியிலே அத்வேஷம் பற்றாசாகக் கொண்டு தன்னுடைய நிரவதிக க்ருபையாலே ரக்ஷித்தருளின மஹோபகாரகன்" என்றும் "ஆசார்யனாலே இப்பேறுபெற்றேன்" என்றும் "என்னைத் தீமனங்கெடுத்தாய்" "மருவித் தொழும் மனமே தந்தாய்" என்றும் "உனக்கென் செய்கேன்" என்றும் ஆசார்யன் பண்ணின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமல் தடுமாறி, "குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பரா கதி:, குருரேவ.பரா வித்யா குருரேவ பரம் தநம், குருரேவ பர: காம: குருரேவ பராயணம், யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:" என்கிறபடியே இஹபர லோகங்களிரண்டும் ஆசார்யன் திருவடிகளே என்றும் த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டும்

"ஓ! ஓ! உலகினதியல்வே" என்றும், கூவி வெருவி இந்நிலத்திற்பொருந்தாமை தோற்றத் துவண்ட சேதனனுக்கரயிற்று பகவத்ஸம்பந்தம் சொல்லுவது. அங்ஙனன்றிக்கே, வாய்க் கரையிலே பொரிபுறந்தடவின ஆநுகூல்யம் கண்டாதல், த்யாஜ்யமான அர்த்தகாமங்களிலே நசையாலேயாதல், நிலை நில்லாத ஒரு ப்ரபாவத்தை நச்சியாதல், ஒன்றாலே வந்ததுவும் துவட்சியில்லாக் கழனிமுண்டர்க்கு ஒரு நல்வார்த்தை சொன்னானாகில் தன் மதிப்பும்கெட்டு, தன் கூற்றிலே ஓதுங்கின பகவத்ப்ராப்தியும் நழுவவிட முடிந்து, கேட்கிறவனையும் நாஸ்திகனாக்குகிறானித்தனை.

ஆசார்யபேதமும் ஆத்மபேதத்தோபாதி. பிதாவை, மாதுலனை, மாமனை, ஸாவித்ர்யுபதேசம் பண்ணினவனை, அத்யயநம் பண்ணுவித்தவனை, ஒரு மந்த்ரம் உபதேசித்தவனை, பகவந்மந்த்ரம் உபதேசித்தவனை இப்படி ஆராய்ந்து பார்த்தால் அநேகராயிருப்பார்கள். இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். "இதுவென்? பகவந்மந்த்ரம் சொல்லுவித்தவனையும் அப்படிச் சொல்லலாமோ?" என்னில்: பகவதவதாரங்களும் பகவத் குணங்களும் எல்லையை என்றும் இறந்திருக்கும். பகவதவதாரங்கள் தோறும் பகவத்குணங்கள் தோறும் திவ்யசேஷ்டிதங்கள் தோறும் திருமந்த்ரங்களும் உளவாயிருக்கும். ஸம்ஸாரத்தில் ஸ்த்ரீபுமான்கள் ஸம்ச்லேஷ விச்லேஷரூபமான ஸ்ரீகோபால மந்த்ரத்தை உபதேசிப்பாரும், புத்ரப்ரதமான மந்த்ரத்தை உபதேசிப்பாரும், ஐச்வர்யமென்ன, ஆரோக்யமென்ன, விஜயார்த்தமென்ன, சத்ருநிரஸனமென்ன, இவற்றுக்குத் தக்க மந்த்ரங்களையும் உபதேசிப்பாரெல்லாம் ஸம்ஸாரத்தை வர்த்திப்பார்களாகையாலே ஆசார்யர்களாகமாட்டார்கள். இவ்வர்த்தம் திருமந்த்ரத்தைக் குறித்தன்று: விநியோகம் கொள்ளுகிற சேதனனுடைய நினைவைப் பற்ற. விபரீத ஸ்பர்சமுடைய எம்பெருமான், நீசஸ்பர்சமுடைய மந்த்ரம், நீசஸ்பர்சமுடைய ஆசார்யன் இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். விபரீத ஸ்பர்சமுடைய எம்பெருமானாவான்:— இதரதேவாலயங்களில் இருக்குமவன். நீசஸ்பர்சமுடைய மந்த்ரமாவது:— பகவத்பாகவத கைங்கர்ய ப்ராப்திக்கு அவ்வருகான ஆபாஸங்களுடையச் சொல்லுமது. நீசஸ்பர்சமுடைய ஆசார்யனாவான்:—இதுக்குப் புறம்பு சில ஸம்ஸாரத்தில் மினுக்கங்களைத் தோன்றச் சொல்லுமவன்.

இனி, ஆசார்யன் ஆரென்னில்: பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபார நிவ்ருத்திரூபமான ப்ரபத்தியை உபதேசிக்கிறவன் ஆசார்யனாவான்; "ச்ரிய:பதியான எம்பெருமானையே ரக்ஷகனென்று விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்" என்று அருளிச்செய்யுமவன். ஸதாசார்யன் ஸச்சிஷ்யனை பகவத்ப்ரஸாதத்தாலே கிடைத்த ஸ்ரீவைஷ்ணவனென்று மிகவும் ஆதரித்துக்கொண்டு போரும். ஸச்சிஷ்யனும் ஸதாசார்யனுடைய ஆதரத்தைக் கண்டு இறுமாவாதே தன் கருந்தரையை உணர்ந்து "பகவத்விமுகனாய் சப்தாதிவிஷயங்களிலே மண்டி உருமாய்ந்து கைகழிந்து நின்ற என்னை முதலடியிலே அத்வேஷம் பற்றாசாகக் கொண்டு தன்னுடைய நிரவதிக க்ருபையாலே ரக்ஷித்தருளின மஹோபகாரகன்" என்றும் "ஆசார்யனாலே இப்பேறுபெற்றேன்" என்றும் "என்னைத் தீமனங்கெடுத்தாய்" "மருவித் தொழும் மனமே தந்தாய்" என்றும் "உனக்கென் செய்கேன்" என்றும் ஆசார்யன் பண்ணின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமல் தடுமாறி, "குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பரா கதி:, குருரேவ பரா வித்யா குருரேவ பரம் தநம், குருரேவ பர: காம: குருரேவ பராயணம், யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:" என்கிறபடியே இஹபர லோகங்களிரண்டும் ஆசார்யன் திருவடிகளே என்றும் த்ருஷ்டாத்ருஷ்டங்க ளிரண்டும்

அவனே என்றும் நினைத்திருக்கும். ஆசார்யன் சிஷ்யனுடைய ஹிதத்தைச் செய்யுமவன்; சிஷ்யன் ஆசார்யனுடைய ப்ரியத்தைச் செய்யுமவன். "ஆசார்யன் சிஷ்யனுடைய ஆத்மயாத்ரையைத் தனக்கு தேஹயாத்ரையாக நினைத்திருக்கும்" என்று விச்வஸித்திருக்கிறதற்கு மேலில்லை. சிஷ்யனும் அப்படியே ஆசார்யனுடைய தேஹயாத்ரையைத் தனக்கு ஆத்மயாத்ரையாக நினைத்திருக்கும். ஆசார்யனானவன், சிஷ்யனுடைய உயிரை நோக்கும். சிஷ்யன் ஆசார்யனுடம்பை நோக்கும். சிஷ்யவஸ்துவை ஆசார்யன் விநியோகம் கொள்ளக்கடவனல்லன். "சிஷ்யவஸ்துவை விநியோகம் கொள்ளுகிறேன்" என்றிருக்கும் ஆசார்யனுடைய அறிவையும் சங்கிக்க அடுக்கும். ஆசார்யனுக்குத் தன் வஸ்துவை உபகரிக்கிறேன் என்றிருக்கும் சிஷ்யனுடைய அறிவையும் சங்கிக்க அடுக்கும். "சரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்" என்றும் "உற்ற எண்ணில் அதுவுமற்றங்கவன்றன்னது" என்றும் சிஷ்யனுக்கு ப்ரதிபத்தியாகையாலும், இந்த ருசியை விளைப்பித்தான் ஆசார்யனாகையாலும் ஆசார்யனுக்கும் சிஷ்யனுக்கும் ஒரு நினைவேயாகவேணும். ஆசார்யன் பொறைக்கு இலக்கான [illegible]யனுக்கு பகவத்ஜ்ஞானமே கைவந்ததென்ன வொண்ணாது. ஆசார்யன் கண்வட்டத்தில் வ[illegible]திக்கிற ஸச்சிஷ்யனுக்கும் ஆசார்யன் ப்ரியமே செய்கையாலே கோபத்துக்கு ஹேதுவில்லை. ஆகையால் ஆசார்யன் பொறை குமரிருந்து போமித்தனை. ஆசார்யன் அர்த்தகாமங்களில் நசையற்றவனாகையாலே த்யாஜ்யமான அர்த்தகாமங்கள் ஹேதுவாகப் பொறுக்கவும், வெறுக்கவும் ப்ராப்தியில்லை. இனி இவனுடைய ஹிதரூபமாக வெறுத்தானாகிலும் அதுவும் ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவது.

மட்டியூரரங்கத்தாரும், பணிகையோசைப் பிள்ளானும், பெற்றியும், நஞ்சீயருமாக எழுந்தருளியிருக்கச்செய்தே நஞ்சீயரைப் பார்த்து "ஒரு வைஷ்ணவன் ஓராசார்யன் ஸ்ரீபாதத்திலே பகவத்ஸம்பந்தத்தைப் பண்ணி வேறோராசார்யன் ஸ்ரீபாதத்திலே ஸ்வரூப சிக்ஷையாயிருந்தது. இருவர் பக்கலிலும் இவன் அநுவர்த்திக்கும்படி எங்ஙனே?" என்று விண்ணப்பஞ்செய்ய, "ஆரைத்தான் நீர் விடப் பார்க்கிறீர்? முற்படக் கருந்தரையிலே ஒரு நல்வார்த்தையைச் சொல்லுமவர் 'ச்ரிய:பதியான எம்பெருமானுடைய திருவடிகளையே விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்' என்று அருளிச்செய்யுமவர். பின்பு அவனைக்குறித்து ஒரு நல்வார்த்தை சொல்லுமவன் 'நீரார் ஸ்ரீபாதத்தையுடையீர்?' என்று கேட்டு இவனை ரக்ஷித்த ஆசார்யனுக்கு ஒரு ப்ரியம் செய்தானுமாய், இவன் ஹிதத்தின் மேலெல்லை நிலத்தைப் பிடித்து 'உன் ஆசார்யன் திருவடிகளையே விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்' என்றாயிற்று வார்த்தை சொல்லுவது. ஆகையால் இருவரும் உபாதேயதமர்" என்று அருளிச்செய்தார். "ஏகாக்ஷரப்ரதாதாரம் ஆசார்யம் யோவமந்யதே, ச்வாநயோநிசதம் ப்ராப்ய சண்டாளேஷ்வபிஜாயதே" என்னக்கடவதிறே. "முமுக்ஷுக்களுக்கு மாதாபிதாக்கள் ஆர்?" என்று கேட்க "சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:" என்கிற மாதாபிதாக்களும், 'த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா' 'பிதா மாதா ச மாதவ:' என்று பொதுவான மாதாபிதாக்களும் இவனுக்கன்று. அவர்களுமல்ல. இனி யாரென்னில், திருமந்த்ரம் மாதாவுமாயும் பிதா ஆசார்யனும்" என்று அருளிச்செய்வர். இத்தை நினைத்திறே நஞ்சீயரை அனந்தாழ்வான் "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயநிஷ்டராவீர்" என்று வாழ்த்திற்றும். "உத்பாதகப்ரஹ்மபித்ரோ: கரீயாந் ப்ரஹ்மத: பிதா" என்றும் உண்டு.

"முமுக்ஷுக்களுக்கு ஸம்ஸாரத்திலே இருக்கும் நாள் உசாத்துணை யார்? பொழுது போம்படி என்?" என்று நஞ்சீயரைப்பிள்ளை கேட்க, "முமுக்ஷுவென்று ஒரு ஜாதியன்று;

ஒரு ஆச்ரம மன்று; மோக்ஷத்திலே இச்சையுடையவனை முமுக்ஷுவென்றது இத்தனை; இவனுக்கு உசாத்துணையும் இவனோடே சேர்ந்து போதுபோக்குமுள்ளதும் விரஜைக்கு அக்கரையிலே போனாலிறே. இவ்விருப்பிலே ஓராசையுடையவனுக்கன்றோ துணைவேண்டுவதும் போதுபோக்குமுள்ளதும். இருக்கும் நாள் பிராட்டிக்கு லங்கையில் உசாத்துணையுண்டாகில் இவனுக்கும் ஸம்ஸாரத்தில் துணையுண்டு. அறிவுடையரான முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரம் பிராட்டிக்கு லங்கையோபாதியிறே. அவளுக்கு ராவணன் அபிமானித்த அசோகவனிகையோபாதி, இவனுக்கு இவ்வுடம்பு. அவளுக்கு மாரீசனுடைய தோற்றரவோபாதி இவனுக்கு விஷயப்ராவண்யம். 'அகற்ற நீ வைத்த மாயவல்லைம்புலன்கள்' என்னக்கடவதிறே. அவளுக்கு ராவணன் தோற்றரவோபாதி இவனுக்கு ஸம்ஸாரத்தின் தோற்றரவு. அவளுக்குத் தர்ஜனபர்த்ஸனாதிகளைப் பண்ணும் ராக்ஷஸிகளோபாதி இவனுக்குப் புத்ரமித்ராதிகள். ஏகாக்ஷி ஏககர்ணிகளோபாதி இவனுக்கு அஹங்கார மமகாரங்கள். அவளுக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானும் பெண்மகளும் போலே இவனுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உசாத்துணையாயிருக்கும்படி. அவளுக்குத் திருவடி தோற்றரவோபாதி இவனுக்கு ஆசார்யன் தோற்றரவும். அவளுக்குத் திருவடி வர்ணித்த ஸ்ரீராமகுணங்களோபாதி இவனுக்கு ஆழ்வார்கள் அருளிச்செயல்களும், ஸ்ரீராமாயண மஹாபாரதாதி பகவத்கதைகளும். அவளுக்குத் திருவடி கொடுத்த திருவாழி மோதிரத்தோபாதி இவனுக்கும் ஆசார்யன் திருவுள்ளமான திருமந்த்ரம். அவளுக்குத் திருவாழி மோதிரம் சாத்தின மணிவிரலை நினைப்பது, அணைத்த திருத்தோளை நினைப்பது, அவ்வழியாலே திருமேனியை முழுக்க நினைப்பதாய் இலங்கையில் தனியிருப்பையும் மறியாதே பெருமாளோடே ஒரு படுக்கையில் இருந்தாற்போலே இவன் திருமந்த்ரத்தில் ப்ரதமாக்ஷரத்தில் சொல்லுகிற ரக்ஷகத்வ சேஷித்வங்களை நினைத்து அந்த ரக்ஷகத்வசேஷித்வங்களுக்கு இடைச்சுவரான அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யநிஷேதத்தைப் பண்ணித் தன்னை அநந்யார்ஹசேஷமாக்கின அவதாரணத்தை நினையா, அவ்வநந்யார்ஹசேஷ வஸ்துவுக்கு உஜ்ஜீவனம் நிருபாதிகசேஷியானவனுக்குக் கிஞ்சித்கரிக்கையென்கிற அர்த்தத்தைக் காட்டும் நாராயண பதத்தை நினையா, இப்படித் திருமந்த்ரத்தில் அர்த்தாநுஸந்தானத்தாலே ஸம்ஸாரத்தில் இருப்பையும் மறியாதே பாமருமூவுலகத்துள்ளே தெளிவுற்ற சிந்தையராய் வர்த்திப்பர்கள். பிராட்டிக்கு லங்கையிலே பொழுதுபோக்குப் போலே முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரத்திலே பொழுதுபோக்கு. ஸம்ஸாரிகளிற்காட்டில் முமுக்ஷுவுக்கு || லங்கையிலுள்ளார், தன்னிலைமை வாசிதோன்ற உண்பாருறங்குவாராய், ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளோடே போதுபோக்காய், பிராட்டி ஊணுமுறக்கமுமின்றிக்கே, பத்துக்கோடி செந்நாய்க்கு நடுவே ஒரு மான்பேடை இருந்தாற்போலே, பெருமாள் தோள் வீரத்தை அநுஸந்தித்து, அவ்வீரத்துக்கு இடையூறானவொரு ப்ரவ்ருத்திக்கும் க்ஷமையன்றிக்கே துரும்பு நறுக்காதே இருந்தாப் போலே முமுக்ஷுவுக்கும் 'உண்ணாநாள் பசியாவது ஒன்றில்லை' என்றும், 'நாட்டு மானிடத்தோ டெனக்கரிது' என்றும், 'நாட்டாரோடியல்வொழிந்து' என்றும் 'கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ' என்றுமிருக்கை. ஸம்ஸாரிகளுக்கு வாஸஸ்தானம் ஒரு க்ராமமாத்ரமாய், ஆச்ரயம் க்ஷேத்ரஜ்ஞனை யிருப்பானொரு எளியனும்பனாய், ப்ரயோஜனமும் வயிறு வளர்க்கையாயிருக்கும். முமுக்ஷுவுக்கு இருப்பிடம் எம்பெருமானேயாய், ஆச்ரயம் எம்பெருமானேயாய், ப்ரயோஜனமும் கைங்கர்யமேயாயிருக்கும். 'வைத்த பரிசிது காண்மின்' என்று இந்நிலத்துப் பொருந்தாமையும், பொருந்தின நிலத்தில் புகப்பெறுமையும் வடிவிலே தோற்றும்படியாய்க் 'கண்கள் அசும்பொழுக நினைந்திருந்தே சிரமம் தீர்த்தேன்' என்றிருப்பர்கள்."

|| இவ்விடத்தில் சில வாக்கியங்கள் காணப்படவில்லை.

இவ்விருப்பில் பொருந்தாமை விளைப்பித்து இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே கருத்தரையிலே புகுந்து பகவத்விஷயத்தை உபகரித்த ஆசார்யனுக்கு சிஷ்யன் பண்ணும் உபகாரமேதென்னில்: ஆசார்ய விஷயீகாரத்துக்கு இலக்காகு சிஷ்யன் நல்வழிக்கு உறுப்பாக நடக்கும் நடக்கைகளடைய ஆசார்யனுக்கு உபகரித்தானாகவாயிற்று, ஆசார்யன் திருவுள்ளத்தில் அநுஸந்தித்திருக்குமது. அவையாவன:—தன் முன்னடி பார்த்து நடக்கையும்; பிறருடைய குணகுணநிரூபணம் பண்ணாதொழிகையும்; ஸ்வதோஷத்தில் ஸர்வஜ்ஞனாயிருக்கையும்; பரதோஷத்தில் அஜ்ஞனாயிருக்கையும்; அந்யசேஷத்வம், ஸ்வஸ்வாதந்த்ர்யம், தேஹாத்மாபிமானம், ஆத்மஸ்துதி, பரநிந்தை என்கிற எல்லை மயக்குக்கள் பரிஹரித்து நடக்கையும்; எம்பெருமானுடைய வாய் புகு சோற்றைப் பறியாதொழிகையும்; அதாவது: எம்பெருமானுடைய வகுத்த ரக்ஷகத்வத்தைத் தளித்தான் தனக்கு ரக்ஷகனென்றிருக்கை; ஆசார்யனையும், திருமந்த்ரத்தையும், எம்பெருமானையும், அவமானம் பண்ணாதொழிகையும்; ஆசார்யனை அவமானம் பண்ணுகையாவது:—தன் முன்னடி பார்த்து நடவாதொழிகையும், அவன் அருளிச்செய்த திருமந்த்ரத்தைத் தரையில்லாத் தரையிலே சிந்தி அழிக்கையும்; திருமந்த்ரத்தை அவமானம் பண்ணுகையாவது:—திருமந்த்ரத்தை மறக்கையும், திருமந்த்ரம் அருளிச்செய்த ஆசார்யனை அநாதரிக்கையும், திருமந்த்ரத்தால் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தின் படியொழிய அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய தேஹாத்மாபிமானாதிகளிலே மொத்துண்டு கிட்டம் தின்ற மாணிக்கம் போலே உருமாய்ந்து போகையும்; எம்பெருமானை அவமானம் பண்ணுகையாவது:—அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு இடைச்சுவராக க்ஷேத்ரஜ்ஞரை ரக்ஷகராக நினைத்து அவர்கள் வாசல்கள் தோறும் நுழைந்து ஸர்வேச்வரனை ஸ்துதிக்கிற நாக்கை விட்டு புரோடாசத்தை நாய்க்கிடுமாப்போலே க்ஷேத்ரஜ்ஞரை ஸ்துதிக்கையும்.

எம்பெருமானுக்கும் ஆத்மாவுக்கும் ப்ராப்தி அவிநாபூதமாயிருக்க, புருஷகாரம் வேண்டுவானென்னென்னில்: இருக்கிற ஸம்ஸாரமும், எடுத்த உடம்பும், இந்த ப்ராப்திக்கு இடைச்சுவரான அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய தேஹாத்மாபிமானாதிகளை விளைப்பித்துத் தன்னை மறந்து உருமாயப்பண்ணுமதாகையாலே ஸாபராதனான தன் படியையும், அபராதத்தையும் அறிகைக்கு ஸர்வஜ்ஞனுமாய், அறிந்தபடி அநுபவிப்பிக்கைக்கு ஸர்வசக்தியுமாய், தான் ஸ்வதந்த்ரனுமாயிருக்கையாலே இவன் அபராதத்தைக் கண்டு அழியச் செய்யாமைக்குப் புருஷகாரம் வேணும். ஆனால் பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் ப்ராப்தி ஒத்திருக்குமாகில் பிராட்டியைப் புருஷகாரமாகச் சொல்லுவானென்னென்னில்: இருவர்க்கும் இரண்டுகுண முண்டாகையாலே. எம்பெருமானுக்கு ஸ்வாதந்த்ர்யமும் நீர்மையுமுண்டு. பிராட்டி வெறும் நீர்மையே வடிவாயிருக்கும். எங்ஙனேயென்னில்: மத்யராத்ரியிலே காதகரும் கூட இரங்கும்படியான சரணாகதியை முன்னிட்டுக் கொண்டுவந்த ஸ்ரீவிபீஷணாழ்வானையுங்கூட "வத்யதாம் பத்யதாம்" என்ன, ஒரு நிலை நின்று கைக்கொண்டது பெருமாள் ப்ரக்ருதி; தன்னை நலிந்த ராக்ஷஸிகளைத் திருவடி நலியப்புக, பெருமாள் பரிகரமென்று மறியாதே "ந கச்சிந் நாபராத்யதி" என்றது பிராட்டி ப்ரக்ருதி.

ஆனால் பிராட்டியும் ஆசார்யனும் இரண்டு புருஷகாரம் வேண்டுவானென்னென்னில்: "சரண்யன் குறையும் சரணாகதன் குறையும் தீர்த்து இருவர்க்கும் ஸ்வரூபம் பெறுகைக்காக" என்று அருளிச்செய்தார். குருபரம்பரையை முன்னிடவே சரணாகதன் குறை தீரும்; பிராட்டியை முன்னிடவே சரண்யன் குறை தீரும். சரண்யனுக்குக் குறையுண்டோ.

என்னில் : நித்யவிபூதி போலே தெளிவிசும் பன்றிக்கே இருள் தருமா ஞாலமான ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதநனை இந்நிலத்தின் தன்மை பாராதே பிழை பெறும் ஸ்வாதந்த்ர்யம் சரண்யனுக்குக் குறை. அக்குறை பிராட்டியை முன்னிட்டே தீரும். எம்பெருமான் இவ்வாத்மாவைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. ஆத்மா எம்பெருமானைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. இவ்வர்த்தம் இளையபெருமாள், ஸ்ரீவிபீஷணப்பெருமாள், ஸ்ரீகுஹப்பெருமாள், திருவடி, மஹாராஜருள்ளிட்டார் பக்கலிலும் காணலாம். எம்பெருமானுக்கு ரக்ஷித்தே ஸ்வரூபம் பெறவேணும். பிராட்டிக்கு ரக்ஷிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும். ஆசார்யனுக்கும் இவ்வர்த்தம் அறிவிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும். இவ்வர்த்த மறிக்கை அத்யவஸித்தபோதே ஸ்வரூபஸித்தி. சேதனனுக்கு அர்த்தகாமத்தில் ஆசையறவே ஆச்ரமம் நிறம் பெறும். அஹங்கார மமகார மற வைஷ்ணவத்வம் நிறம் பெறும். இவைதான் பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்களாயிருக்கும்.

பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபாரத்தில் நிவ்ருத்தி ப்ரபத்தி. "ப்ரபத்தியாவது, ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றுகை" என்று ஆழ்வான் பணிக்கும். அதாவது:— அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனான தன்னை விட்டு ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனுமான எம்பெருமானைப் பற்றுகை. ப்ரபத்திக்கு ஸ்வரூபம் ஏது? அங்கம் ஏது? ப்ரமாணம் ஏது? அதிகாரிகள் ஆர்? என்னில்: திருவடியைக் கட்டின ப்ரஹ்மாஸ்த்ரம் சணற்கயிறு காண விட்டுப்போனாப்போலே தன்னையொழிந்த உபாயாந்தரங்களைப் பொகடொழிகை ஸ்வரூபம். இதரோபாயத்யாகம் அங்கம். ஸகல ப்ரமாணப்ரதிபாத்யனான எம்பெருமான் தானே "மாமேவ யே ப்ரபத்யந்தே" என்று அருளிச்செய்கையாலே அது தானே ப்ரமாணம். தானும் பிறரும் தஞ்சமென்றிருக்கும் நன்மைக்கு எம்பெருமானுக்கு அவ்வருகு இல்லையென்றிருக்கையும், பிறருடைய அநர்த்தாப்யுதயங்கள் தன்னதென்றிருக்கையும் இவை தொடக்கமானவை. அர்த்தச்ரத்தை பிறந்தபோது தேஹாத்மாபிமானம் போயிற்றில்லையாகக்கடவது. தன்னையுள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குணகுண நிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. எம்பெருமானை உள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குணகுணநிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. சைதன்யம் நடையாடினவன் தன்னைப் பார்த்துத்தளர்தல் எம்பெருமானைப் பார்த்துத் தேறுதல் செய்யுமித்தனையொழிய பொழுதைப் பழுதே போக்கான். இனி, பிறருடைய குணகுணநிரூபணம் பண்ணுகிறது, பகவத்ஜ்ஞானம் நெஞ்சிற்படாமையாலே. உணர்த்தியற்றவன் உறங்குகிறானாயிருப்பது. "மூக ஜ்ஞாநே" என்கிறதாது.

அசித்துக்கும் ஒரு குணமுண்டு. ஈச்வரனுக்கும் ஒரு குணமுண்டு. அசித்து தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டாது. தேஹாத்மாபிமானி பிறர் காலில் துவளான். "ந நமேயம்" என்றிருக்குமதொழிய எம்பெருமானையாதல் ஸ்ரீவைஷ்ணவர்களையாதல் வணங்கானே. எம்பெருமானும் தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டான். திருமந்த்ரநிஷ்டன் அஸத்துக்கள் காலில் வணங்கான். ஆத்மா ப்ரக்ருதியை அண்டைகொண்டு எம்பெருமானை உறுமுதல், எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை உறுமுதல்செய்யுமதொழிய ஒன்றில் நில்லாது. ஹிரண்யன் ப்ரக்ருதியை அண்டை கொண்டு எம்பெருமானோடே எதிரிட்டு முடிந்து போனான்; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை [illegible]

என்னில்: நித்யவிபூதி போலே தெளிவிசும்பன்றிக்கே இருள் தருமா ஞாலமான ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதநனை இந்நிலத்தின் தன்மை பாராதே பிழையெழுதும் ஸ்வாதந்த்ர்யம் சரண்யனுக்குக் குறை. அக்குறை பிராட்டியை முன்னிடவே தீரும். எம்பெருமான் இவ்வாத்மாவைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. ஆத்மா எம்பெருமானைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. இவ்வர்த்தம் இளையபெருமாள், ஸ்ரீவிபீஷணப்பெருமாள், ஸ்ரீகுஹப்பெருமாள், திருவடி, மஹாராஜருள்ளிட்டார் பக்கலிலும் காணலாம். எம்பெருமானுக்கு ரக்ஷித்தே ஸ்வரூபம் பெறவேணும். பிராட்டிக்கு ரக்ஷிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும். ஆசார்யனுக்கும் இவ்வர்த்தம் அறிவிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும்; இவ்வர்த்தமறிந்து அத்யவஸித்தபோதே ஸ்வரூபஸித்தி. சேதனனுக்கு அர்த்தகாமத்தில் நசையறவே ஆச்ரமம் நிறம் பெறும். அஹங்கார மமகார மற வைஷ்ணவத்வம் நிறம் பெறும். இவைதான் பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்களாயிருக்கும்.

பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபாரத்தில் நிவ்ருத்தி ப்ரபத்தி. "ப்ரபத்தியாவது, ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றுகை" என்று ஆழ்வான் பணிக்கும். அதாவது:— அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனான தன்னை விட்டு ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனுமான எம்பெருமானைப் பற்றுகை. ப்ரபத்திக்கு ஸ்வரூபம் எது? அங்கம் எது? ப்ரமாணம் எது? அதிகாரிகள் ஆர்? என்னில்: திருவடியைக் கட்டின ப்ரஹ்மாஸ்த்ரம் சணற்கயிறு காண விட்டுப்போனாப்போலே தன்னையொழிந்த உபாயாந்தரங்களைப் பொருதொழிகை ஸ்வரூபம். இதரோபாயத்யாகம் அங்கம். ஸகல ப்ரமாணப்ரதிபாத்யனான எம்பெருமான் தானே "மாமேவ யே ப்ரபத்யந்தே" என்று அருளிச்செய்கையாலே அதுதானே ப்ரமாணம். தானும் பிறரும் தஞ்சமென்றிருக்கும் நன்மைக்கு, எம்பெருமானுக்கு அவ்வருகு இல்லையென்றிருக்கையும், பிறருடைய அநர்த்தாப்யுதயங்கள் தன்னதென்றிருக்கையும் இவை தொடக்கமானவை. அர்த்தச்ரத்தை பிறந்தபோது தேஹாத்மாபிமானம் போயிற்றில்லையாகக்கடவது. தன்னையுள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குறைகுண நிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. எம்பெருமானை உள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குறைகுணநிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. சைதன்யம் கலையாடினவன் தன்னைப் பார்த்துத்தளர்தல் எம்பெருமானைப் பார்த்துத் தேறுதல் செய்யுமித்தனையொழிய பொழுதைப் பழுதே போக்கான். இனி, பிறருடைய குறைகுணநிரூபணம் பண்ணுகிறது, பகவத்ஜ்ஞானம் நெஞ்சிற்படாமையாலே. உணர்த்தியற்றவன் உறங்குகிறனாயிதேயிருப்பது. "மந ஜ்ஞாநே" என்கிற தாது.

அசித்துக்கும் ஒரு குணமுண்டு. ஈச்வரனுக்கும் ஒரு குணமுண்டு. அசித்து தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டாது. தேஹாத்மாபிமானி பிறர் காலில் துவளான். "ந நமேயம்" என்றிருக்குமதொழிய எம்பெருமானையாதல், ஸ்ரீவைஷ்ணவர்களையாதல் வணங்கானே. எம்பெருமானும் தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டான். திருமந்த்ரநிஷ்டன் அஸத்துக்கள் காலில் வணங்கான். ஆத்மா ப்ரக்ருதியை அண்டைகொண்டு எம்பெருமானை உறுமுதல், எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை உறுமுதல்செய்யுமதொழிய ஒன்றில் நில்லாது. ஹிரண்யன் ப்ரக்ருதியை அண்டைகொண்டு எம்பெருமானோடே எதிரிட்டு முடிந்து போனான்; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை எதிரிட்டு வாழ்ந்து

போனான். ப்ரக்ருதியைச் செறியச்செறிய அந்தகாரம் மிகும். எம்பெருமானைச் செறியச் செறிய வெளிச்செறிப்பு மிகும். ஹிரண்யராவணாதிகள்; கைகேயி, கூனி பக்கலிலே காணலாம். த்ரிஜடை, விபீஷணாழ்வான் பக்கலிலேயும் காணலாம். ப்ரக்ருதியினுடைய அஸ்திரத்வாதிதோஷங்களை ஆசார்யன் காட்டக்கண்ட சேதநனுக்கு இவ்வர்த்தம் நெஞ்சிற் படாதாகில் பகவத்ப்ராப்தியளவும் பயங்கெட்டிருக்க விரகில்லை. "தேறேலென்னை உன் பொன்னடிச்சேர்த்தொல்லை வேறே போக எஞ்ஞான்றும் விடல்" என்பது, "மங்க வொட்டு" என்பது, "இந்நின்ற நீர்மை" என்பது, "இதுகண்டாய்" என்பதாய், "வழித் தங்கு வல்வினையை மாற்றானோ" என்பதாய், "நடுவேயோருடம்பிலிட்டு" என்று அஞ்சிக் கூப்பிடாநிற்பர்கள். பகவத்ஸம்பந்தம் பண்ணின பின்பு இவ்வுடம்பைக் கண்டுவைத்து அஞ்சாதே இருந்தவனுடைய ஜ்ஞானத்தைச் சோதிக்கவடுக்கும்.

ஆத்மா அச்சேத்யனாய், அதாஹ்யனாய், அக்லேத்யனாய், அசோஷ்யனாய், ஸர்வகத னாய், ஜ்ஞானானந்தஸ்வரூபனாய், பகவச்சேஷபூதனாயிருந்துவைத்து ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே மனஸ்ஸையுங்கொண்டு உருமாய்ந்து "அஸந்நேவ ஸ பவதி" என்று உண்டாயிருக்கச்செய்தே இல்லாதார் கணக்காய் நின்றநிலையை ஆசார்யன் காட்டக்கண்ட அனந்தரம் விரோதிகழிந்து ப்ராப்யதேசத்திலே புகுருமளவும், ராக்ஷஸிகள் மத்யேயிருந்த பிராட்டியைப் போலே தனிமைப் படுகையைப்போலவும் காலாக்னி மத்யே அகப்பட்டாரைப் போலவும் ஹாலாஹலவிஷத்தினிடை அகப்பட்டாரைப்போலவும் இதனுடைய பொருந்தாமை தோற்றப் பெருங்கூப்பீடாகக் கூப்பிட்டு இத்தை விடுவிக்கவல்ல மஹாபாகவதர்களான ஸத்துக்களுடைய ஸஹவாஸங்களால் பெற்ற பகவத்க்ருபையாலும் ஸ்வரூபயாதாத்ம்யத்தாலும்வெளிச்செறிப்புப்பிறந்து இவ்விரோதியை விடுவித்துக்கொள்ளுகையிலே த்வரை விஞ்சிச் செல்லாநிற்கும். "ஜ்ஞாநாந் மோக்ஷ:" "அஜ்ஞாநாத் ஸம்ஸார:" என்கிறது. ஜ்ஞாநமாகிறது ஜ்ஞேயமாகிற பகவத் ஸம்பந்தத்தை அறிந்து, ஸம்பந்தத்துக்கு விரோதியான ஸம்ஸாரஸம்பந்தம் போரு தொழிகையிறே. அஜ்ஞாநாத் ஸம்ஸாரமாகிறது: பகவத்ஸம்பந்தத்துக்கு விரோதியான ப்ராக்ருதப்ராக்ருதங்களோட்டைச்செறிவு. ஸம்ஸாரம் ஆபத்தென்றபடி. அநாத்மநி ஆத்ம புத்தியும், அஸ்வே ஸ்வம்புத்தியும், கர்மபரம்பரையும் ஸம்ஸாரஹேது. பகவத்ப்ரஸாத பரம்பரை மோக்ஷஹேது.

சேதநனுடைய அஹமர்த்தமறியலாவது தேஹாத்மாபிமாநிகளோடொத்த தனக்குத் தான் தேடும் நன்மைகளடையத் தனக்கு நாசமென்றிருக்கை. வங்கிபுரத்து நம்பியார் ஸ்ரீபாதத்திலே யுடையாரொரு ஸ்ரீவைஷ்ணவர் தம்முடைய அந்திமதசையில் "இவ்வவஸ்தையில் உனக்குத் தஞ்சமாக நீ வைத்திருக்கலாவது எது?" என்று விண்ணப்பம் செய்ய "இப்போது இந் நினைவும் கூட அறுகை" என்று அருளிச் செய்தார். அதாவது: ஜ்ஞானம் பிறந்த பின்பு ஜ்ஞாநகார்யமான கைங்கர்யம் கைபுகுரும் தேசவிசேஷத்திலே செல்லுமளவும் அறிவு கெடையாடின சேதநனுக்கு ஆபத்தென்றபடி. "ஆத்மகோ துர்தசாபத்திம் விம்ருச்ய ச ஹரேர் குணாந்" என்கிறபடியே. ஆகையால், தன்னுடைய நினைவு மாறினல்லது "ஸ்மராமி" யும் "நயாமி" யும் பலியாதென்று அருளிச்செய்வர். இவ்வளவு உபாயத்தை ஒட வைத்தது ஏகபதம். உபேயத்தை ஒடவைத்தது மேலில் நமஸ்ஸு. உபாயத்தை விட்டார்கள் பிராட்டி, த்ரௌபதி, திருக்கண்ணமங்கையாண்டானென்றிவர்கள். உபேயத்தை விட்டார்கள் இளையபெருமாள், பெரிய உடையார், சிந்தயந்தி, பிள்ளைதிருநறையூரரையர். எங்ஙனேயென்னில்: "சீதோ பவ" என்னவல்லவன் தன்னுடைய தனியிருப்பையும் மாற்ற

வல்லளாயிருக்க பெருமாளுடைய விரதத்துக்குக் கொத்தையாமென்று அரும்பு நறுக்கா திருந்தபடியாலும், லஜ்ஜையில்லாத கோஷ்டியிலே, லஜ்ஜையை உடையவன் கையிலே தன்னுடைய லஜ்ஜையைப் போகட்டு நிர்லஜ்ஜையாயிருந்தபடியாலும், தன்பாபமெல்லாமற்று வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கினபடியாலும், உபாயத்துக்கு ஸீமாபூமி அவர்கள். "திஷ்" என்ன "குருஷ்வ" என்றபடியாலும், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றபடியாலும், "க்ரியதாமிதி மாம் வத" என்றபடியாலும், "லக்ஷ்மணோ லக்ஷ்மீ ஸம்பந்ந:" என்கிறபடியான ப்ராப்தியாலும், "ஸஹஜகைங்கர்யவிதய:" என்கிற [illegible] அதுக்கேயாகையாலும். பெரிய வுடையாரும், சிந்தயந்தியும், பிள்ளை [illegible] வருத்த விஷயத்தைப் பிரித்துத் தந்தாமுடைய உடம்பைப்பேணாதபடியும் [illegible] விஷயத்தைக் கண்ட மாத்ரத்திலே விரோதியான உடம்பை விடுகையாலும், உபேயத்துக்கு ஸீமாபூமி இவர்கள்.

இதரோபாயத்யாகபூர்வகமாக 'அவனே உபாயமாகவேணும்' என்னும் உபேய ப்ரார்த்தனையை "த்வயம்" என்கிறது. இவ்வர்த்தம் நெஞ்சில் பட்டவர் பிராட்டியைப்போலே அரும்பு நறுக்காதே ஒழியும். த்ரௌபதியைப்போலே தன்னுடைய லஜ்ஜையைப்போகட்டிருக்கும். திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே பரபாபமற்று வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கும். இளையபெருமாளும், பெரியவுடையாரும், பிள்ளைதிருநறையூரரையரும், சிந்தயந்தியும் போலே தந்தாமை முடித்தும் ஸ்வரூபமழியாமல் நோக்கிக்கிற்பர்கள்.

ஆசார்யாங்கீகாரானந்தரத்திலே குருபரம்பரையையும், திருமந்த்ரத்தையும், சரம ச்லோகத்தையும் அநுஸந்தித்து இருந்த இடமறியாமல் தன்னை ஒருங்கவிட்டுக்கொண்டு, தன்னைக் கரையேற்றவல்லனாய், அர்த்தகாமோபஹதனல்லாதானொரு பரமஸாத்விகன் கையிலே தன்னைப் பொகட்டு நிர்ப்பாணாயிருக்கைக்கு மேலில்லை இவனுக்குப் பரிஹரிக்க வேண்டுவது: தேவதாந்தரபஜநம் பண்ணுவாரோட்டை ஸம்பந்திகளுடைய ஸஹவாஸம் விநாசமென்றஞ்சித் தவிரவும், பகவத்ஸ்வத்தை வருந்தியாகிலும் அபஹரிக்கும் [illegible] தொழிலையும், பகவத்ப்ராப்திக்கு விரோதியான விஷயப்ராவண்யம் தன்னை முடிக்குமென்று அஞ்சிப்போரவும், ஆசார்யனளவில் ப்ராக்ருதிப்ராக்ருதங்கள் நிமித்தமாக வரும் அநர்த்தம் பரிஹரித்துப்போரவும், நிலைநின்ற பகவதபசாரம் வருந்தியும் பரிஹரித்துப்போரவும் வேணும்.

"ஒரோரவதாரங்களிற்செய்த ஆனைத்தொழில்களெல்லாம் ஒரோர் பாகவதாபசாரம் பண்ணின பலம் அநுபவிப்பிக்கைக்காக" என்று ஜீயர் அருளிச்செய்வர். கலியுகத்தில் நம்மாசார்யர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தங்களோபாதி ப்ராக்ருதமான்களாக நினைத்திருக்கும் புல்லிமையின்றிக்கேயாயிற்று இருப்பது. 'திருவுடைமன்னர்', 'செழுமாமணிகள்', 'நிலத்தேவர்', 'தெள்ளியார்', 'பெரு மக்கள்', 'பெருந்தவத்தர்', 'அருளுடையாசிரியர்', 'ஓத்து வல்லார்', 'தக்கார்மிக்கார்', 'வேதம் வல்லார்', 'வேதமில் [illegible] மனிசர்', 'எம்பிரான்றன சின்னங்கள்' என்று நம் குலநாதரான ஆழ்வார்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்படித் திருநாமம் சாற்றுகையாலே, கேவலம் தன்னோடொக்க [illegible] வென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைத்திருக்கை பாகவதாபசாரம். பகவதபசாரம் பண்ணுகையாவது: எம்பெருமானுடைய அர்ச்சாவதார ஸ்ரீவைஷ்ணவர்கள் இறந்துப் பண்ணும் அபசாரம். பாகவதாபசாரம் பண்ணுகையாவது, ஸ்ரீவைஷ்ணவர்களுடைய [illegible]

வல்லளாயிருக்க பெருமாளுடைய வீரத்துக்குக் கொத்தையாமென்று அரும்பு நறுக்கா திருந்தபடியாலும், லஜ்ஜையில்லாத கோஷ்டியிலே, லஜ்ஜையை உடையவன் கையிலே தன்னுடைய லஜ்ஜையைப் பொகட்டு நிர்லஜ்ஜையாயிருந்தபடியாலும், தன்பரபரப்பை மாற்று வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கினபடியாலும், உபாயத்துக்கு ஸீமாபூமி அவர்கள். 'நில்' என்ன "குருஷ்வ" என்றபடியாலும், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றபடியாலும், "க்ரியதாமிதி மாம் வத்" என்றபடியாலும், "லக்ஷ்மணோ கதாம் கதிம்" என்கிறபடியான ப்ராப்தியாலும், "ஸஹஜகைங்கர்யவிதய:" என்கிற அர்த்தம் கைப்பட்டது அவர்க்கேயாகையாலும். பெரிய வுடையாரும், சிந்தயந்தியும், பிள்ளைதிருநறையூரரையரும் வருத்த விஷயத்தைப் பிரித்துத் தந்தாமுடைய உடம்பைப்பேணாதபடியாலும், வருத்த விஷயத்தைக் கண்ட மாத்ரத்திலே விரோதியான உடம்பை விடுகையாலும், உபேயத்துக்கு ஸீமாபூமி இவர்கள்.

இதரோபாயத்யாகபூர்வகமாக 'அவனே உபாயமாகவேணும்' என்னும் உபேய ப்ரார்த்தனையை "த்வயம்" என்கிறது. இவ்வர்த்தம் நெஞ்சில் பட்டவர் பிராட்டியைப்போலே அரும்பு நறுக்காதே ஒழியும். த்ரௌபதியைப்போலே தன்னுடைய லஜ்ஜையைப்பொகட்டிருக்கும். திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே பரபரப்பற்று வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கும். இளையபெருமாளும், பெரியவுடையாரும், பிள்ளைதிருநறையூரரையரும், சிந்தயந்தியும் போலே தந்தாமை முடித்தும் ஸ்வரூபமழியாமல் நோக்கி நிற்பர்கள்.



ஆசார்யாங்கீகாரானந்தரத்திலே குருபரம்பரையையும், திருமந்த்ரத்தையும், சரமச்லோகத்தையும் அநுஸந்தித்து இருந்த இடமறியாமல் தன்னை ஒருங்கவிட்டுக்கொண்டு, தன்னைக் கரையேற்றவல்லனாய், அர்த்தகாமோபஹதனல்லாதானொரு பரமஸத்வநிஷ்டன் கையிலே தன்னைப் பொகட்டு நிர்ப்பரனாயிருக்கைக்கு மேலில்லை. இவனுக்குப் பரிஹரிக்க வேண்டுவது: தேவதாந்தரபஜநம் பண்ணுவாரோட்டை ஸம்பந்திகளுடைய ஸஹவாஸம் விநாசமென்றஞ்சித் தவிரவும், பகவத்ஸ்வத்தை வருந்தியாகிலும் அபஹரித்து ஜீவியா தொழிகையும், பகவத்ப்ராப்திக்கு விரோதியான விஷயப்ராவண்யம் தன்னை முடிக்குமென்று அஞ்சிப்போரவும், ஆசார்யனளவில் ப்ரக்ருதிப்ராக்ருதங்கள் நிமித்தமாக வரும் அநர்த்தம் பரிஹரித்துப்போரவும், நிலைநின்ற பகவதபசாரம் வருந்தியும் பரிஹரித்துப்போரவும் வேணும்.

"ஒரோரவதாரங்களிற்செய்த ஆனைத்தொழில்களெல்லாம் ஒரோ பாகவதாபசாரம் பண்ணின பலம் அநுபவிப்பிக்கைக்காக" என்று ஜீயர் அருளிச்செய்வர். நல்லடிக்காலத்தில் நம்மாசார்யர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தங்களோபாதி ப்ரக்ருதிமான்களாக நினைத்திருக்கும் புல்லிமையின்றிக்கேயாயிற்று இருப்பது. 'திருவுடைமன்னர்', 'செழுமாமணிகள்', 'நிலத்தேவர்', 'தெள்ளியார்', 'பெரு மக்கள்', 'பெருந்தவத்தர்', 'உருவுடையாரிளையார்', 'ஓத்து வல்லார்', 'தக்கார் மிக்கார்', 'வேதம் வல்லார்', 'வேதவிமலர்', 'சிறுமாமனிசர்', 'எம்பிரான்றன சின்னங்கள்' என்று நம் குலநாதரான ஆழ்வார்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்படித் திருநாமம் சாற்றுகையாலே, கேவலம் தன்னோடொக்க ஒரு மனுஷ்யரென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைத்திருக்கை பாகவதாபசாரம். பகவதபசாரம் பண்ணுகையாவது: எம்பெருமானுடைய நற்சீவனான ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்துப் பண்ணுமபசாரம். பாகவதாபசாரம் பண்ணுகையாவது, ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உயிர்நிலையான எம்பெரு

ஆஹாரத்வாரம் உபாதேயம், விஹாரத்வாரம் த்யாஜ்யம். ஆகையாலே, லஜ்ஜாபுரஸ்ஸர நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. காலத்துக்கும், கர்மத்துக்கும், வேதத்தில் பூர்வபாகத்திற் சொல்லப்பட்ட காமத்துக்கும் ப்ரபன்னன் குடிமகனல்லன். "ஆத்மவிச்வாஸமும், அத்யவஸாயமும் உடையராய், க்ருதஜ்ஞராயிருப்பார்க்கல்லது பகவத்விஷயம் சொல்லலாகாது" என்று பலகாலும் அருளிச்செய்வர். ஆசார்யவிச்வாஸமும், அத்யவஸாயமும், தேவதாந்தரபஜனஸம்பந்தமறுகையும், நிலைநின்ற பாகவதாபசாரம் பரிஹரித்துப்போரவும் வேணும். ஆசார்யனுக்கு இவனுபகரிக்குமதாவது:— அவன் தந்த வஸ்துவை நாற்சந்தியிலே வையாதொழிகை. பகவத்ப்ரஸாதம் பாகவதருசியைப் பிறப்பிக்கும். பாகவதருசி ஆசார்யாங்கீகாரத்தைப் பிறப்பிக்கும். ஆசார்யாங்கீகாரம் பகவத்ஸ்வீகாரத்தைப் பிறப்பிக்கும், பகவத்ப்ராப்தி தத்கைங்கர்யத்தைப் பிறப்பிக்கும். தத்கைங்கர்யம் விரோதிநிவ்ருத்தியை அபேக்ஷித்திருக்கும். ஸச்சிஷ்யன் ஸதாசார்யன் பக்கல் பண்ணும் விசதச்ரவணம் "ஸதா பச்யந்தி"க்கே அந்வயிக்கும். இவ்வர்த்தம் ஸதாசார்யன் ஸந்நிதியுண்டாகத் தோற்றும்.

மாணிக்கமாலை முற்றிற்று.

ஆச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# ஷோடசர்க்கு எச்சரிக்கை.

இந்த க்ரந்தத்தை அடியேன் எழுதிப் பலபெரியார்களின் ஸந்நிதிக்கனுப்பியும் சில பெரியார்களிடத்து நேரில் வாசித்துக்காட்டியும் 37—அபிநந்தன பத்திரிகைகளைப் பெற்றே இதனை அச்சியற்றி வெளியிட்டிருக்கிறேன். சில அபிநந்தன பத்ரிகைகள் மாத்திரமே இப்போது வெளியிடப்பட்டிருக்கின்றன. மற்றவையும் விரைவில் வெளியிடப்பெறும். இதன்மேல் மறுப்பெழுதத்தோன்றினால் முன்போல் வீணாக அஸஹ்யாபசாரப்படாமல் விஷயம்எவ்வளவோ அவ்வளவெழுதுவது யுக்தமாகும். என்னுடைய விலாஸத்தையும் இவர்க்குத் தெரிவிக்கிறேன்; ந்யாயசிரோமணி வித்யார்த்தி: கிடாம்பி. ஸ்ரீநிவாஸ வரதாசார்யர். ஸான்ஸ்க்ரிட் காலெஜ், ஸ்ரீபெரும்பூதூர்—இது என்னுடைய விலாஸம். அநாவச்யகமாகப் பெரியார்களைப் பிடித்திழுத்துப் பழிக்காமல், ஸ்வாமியின் அஷ்டாத்யாயி யமைந்திருக்கிற சைலியிலே விஷய விசாரத்தளவிலே நிற்பதே தகும். "பாக்யாயத்நமத:பரம் ந கலு தத்வாக்யம்."

அஷ்டாத்யாயியணிகலனிற் கண்ட பெரியார்களுக்கு விண்ணப்பம்:—ஸ்வாமி வெளியிட்டிருக்கிற ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியையும், சிறியேனுடைய இச்சிறு நூலையும் பூர்த்தியாகக்கடாக்ஷித்து, தம்தம் ஆப்தர்கள் பலரையும் கடாக்ஷிக்கச்செய்து அபிப்ராய பத்ரிகைகளை அநுக்ரஹிக்கவேணுமென்று பிரார்த்திக்கிறேன். ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமி அத்புதமாக அருளிச்செய்தனுப்பிய ச்லோக ரத்னமாலிகை இங்குச் சேர்க்கப்படுகின்றது.

ஸ்ரீ:

அஸ்மத் குருபரம்பராப்யோ நம:.

# பதிப்புரையும் மதிப்புரையும்.

அஸ்மதாசார்யர் திருவடிகளிலுள்ள வழுவிலாத பக்தியினால் அடியேன் இச்சிறு நூலை யெழுதி முடித்துப் பலபெரியார்களும் இதனைக் கடாக்ஷித்தருளுமாறு செய்தேன்.

ஜ்ஞாநவ்ருத்தர், சீலவ்ருத்தர், வயோவ்ருத்தர் என்று கொண்டாடும் பெருமைகளெல்லாம் தற்காலம் ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் வித்வச்ரேஷ்ட, வித்வத் ஸார்வபௌம, ஸ்ரீமத். உ. வே. மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமியிடத்திலே குடிகொண்டிருப்பதால் முதலில் அந்த ஸ்வாமி கடாக்ஷிக்குமாறு செய்தேன். அந்த ஸ்வாமி ஸ்ரீகோவிந்தராஜன் ப்ரஹ்மோத்ஸவாநுபவார்த்தமாகத் திருப்பதியில் எழுந்தருளியிருந்தமையால் அங்கே ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. சின்னஜீயர் ஸ்வாமி ஸஹிதராய்க் கடாக்ஷித்தருளி மிகவும் திருவுள்ளமுகந்ததாகத் தெரிவித்து அநேக ச்லோகங்களையும் தமிழுரையுடன் அநுக்ரஹிக்க ப்ராப்தமாயிற்று. ஸ்ரீகாஞ்சீஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளின் பெருமைகளைப்பற்றி அந்த ஸ்வாமி அநுக்ரஹித்த ச்லோகங்கள் முப்பத்தைந்துக்கு மேற்பட்டவை. அவற்றுள் முக்கியமான சில ச்லோகங்கள் மேலே சேர்க்கப்படும்.

அடியேனுடைய இச்சிறு நூலுக்காக அநுக்ரஹித்தருளின ச்லோக ரத்நஸநாதமான ஸ்ரீமுகம் வருமாறு:—

ஸ்ரீமத்யை கோதாயை நம:.

நாச்சியார் திருமாளிகை மேலைவாத்யார்

## திருமலை ஐயங்கார்.

அநேக மங்களாசாஸநம். ஆச்சான்பிள்ளையாராஹஸ்யம் வெகு ஆனந்தமாக அநுபவிக்கப்பட்டது. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஜீயர்ஸ்வாமியும் திருச்செவி சாத்திப் போர

உகந்தருளியாச்சது. அஷ்டாத்யாயிபணிகலன் 15-வது பக்கத்தின் முடிவில் "எம்பெருமான் அப்படியன்றோ திருவுள்ளம்பற்றி யிருக்கிறு"தென்று தெரிவித்திருந்த விஷயம் இவ்வளவு சீக்கிரமாக ஸத்யாபிதமானது ஆச்சர்யமே. விவாதவிஷயம் வீணாக வளர்ந்துவிட்டதே யென்று வருந்தினதுண்டு; அப்படி வளர்ந்ததும் நன்மையாக முடிந்தது. உலகுக்குப் பல அபூர்வார்த்தங்கள் தெரிய ஆஸ்பதமாயிற்று. ஏற்கெனவே ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்குப் பல ச்லோகங்கள் அனுப்பியிருக்கேன். அவை அச்சாகி வெளிவந்ததாகத் தெரியவில்லை. இப்போதும் ஸ்ரக்தராமாலிகை அனுப்பியிருக்கிறேன். உம்முடைய க்ரந்தத்தைப்பற்றியும் தோன்றின சில ச்லோகங்களை இத்துடன் அனுப்புகிறேன். உம்முடைய க்ரந்தம் அச்சாகி வெளிவந்து மகிழ்விக்கத் தக்கதே.

न्यायवेदान्तविद्यार्थिना श्रीमता सद्गुरुश्रीपदाम्भोजसंसेविना ।
निर्मितां षड्रहस्याभिधां सत्कृतिं वीक्ष्य मोदाम्बुधौ मग्नचित्तोऽस्म्यहम् ॥१॥

ஸதாசார்ய ஸ்ரீபாதஸேவா ரஸிகரான ந்யாயவேதாந்த வித்யார்த்தி இயற்றிய ஆறு ரஹஸ்யமென்னும் சிறந்த நூலைக்கண்டு மிகவும் களித்தேன். ... ... (1)

चिन्नजीयसमाख्याख्ययोगीश्वरा अप्यमेयादरेणाभ्यनन्दन् भृशम् ।
सुष्ठु संदर्शितैस्सत्प्रमाणैस्तथा युक्तिभिश्चाखिलाः पण्डिता हर्षिताः ॥२॥

ஸ்ரீமத் சின்னஜீயர் ஸ்வாமியும் மிகவுமாதரித்துக்கொண்டாடியருளினர். சிறந்தப்ரமாண யுக்திகள் காட்டப்பட்டிருப்பதனால் பண்டிதர்களனைவரும் மகிழ்விக்கப்பட்டிருக்கிறார்கள். (2)

षोडशाध्याय्यभिख्याख्यकृत्यां परैः क्रोधसंमूर्च्छितैर्यद्यदालिख्यत ।
तत्तदत्यद्भुतोक्तिप्रपञ्चैः क्षणात् भस्मसात्कृत्य संश्लाघनीयोऽसि नः ॥३॥

ஷோடசாத்யாயி யென்னும் புத்தகத்தில் சிலர் சீறிச்சிவந்து எழுதினதை யெல்லாம் சிறந்த ஸ்ரீஸூக்திகளைக்கொண்டே விரைவில் பொடிபடுத்திய நீர் நம்போல்வார் கொண்டாடநிற்கின்றீர். ... ... .... .... (3)

वादिवादानशेषानपि स्वादुभिः सूक्तिवृन्दैर्भवान् साधु निर्मूलयन् ।
वर्धतां वर्धतां साधु संवर्धतामित्यशेषैर्बुधैश्शश्वतां विन्दति ॥४॥

வாதியினுடைய எல்லாவாதங்களையும் மதுரமான மொழிகளாலேயே நன்கு நிரஸித்ததனால் ஸகல பண்டிதர்களும் பல்லாண்டு பாடநிற்கின்றீர். .... (4)

वादिभीकृद्गुरोर्वंशवारान्निधौ कौस्तुभाभो गुरुर्यो विभाति क्षितौ ।
तस्य सूक्तीर्भृशं श्लाघमानो जनः श्लाघ्यतामेति चेद्विस्मयः कोऽत्र भोः ॥५॥

ப்ரதிவாதி பயங்கர குலமணியாய்த் தோன்றித் திகழ்கின்ற ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்திகளை ச்லாகித்து எழுதுமவர்க்கு இப்படிப்பட்ட கொண்டாட்டம் விளைகின்றதென்றால் இதில் ஆச்சரியமென்கொல்! .... (5)

विद्वदीड्योक्तिभिर्विश्वमाह्लादयन् सूरिराट् सोऽनिशं भातु भूमौ महान् ।
तद्गिरां क्षेपणे सक्तचित्तान् जनान् नित्यमभ्यर्चिर वीक्ष्य मोदेमहि ॥६॥

உகந்தருளியாச்சுது. அஷ்டாத்யாயிபணிகலன் 15-வது பக்கத்தின் முடிவில் “எம்பெருமான் அப்படியன்றோ திருவுள்ளம்பற்றி யிருக்கிறா”னென்று தெரிவித்திருந்த விஷயம் இவ்வளவு சீக்கிரமாக ஸத்யாபிதமானது ஆச்சர்யமே. விவாதவிஷயம் வீணாக வளர்ந்துவிட்டதே யென்று வருந்தினதுண்டு; அப்படி வளர்ந்ததும் நன்மையாக முடிந்தது. உலகுக்குப் பல அபூர்வார்த்தங்கள் தெரிய ஆஸ்பதமாயிற்று. ஏற்கெனவே ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்குப் பல ச்லோகங்கள் அனுப்பியிருந்தேன். அவை அச்சாகி வெளிவந்ததாகத் தெரியவில்லை. இப்போதும் ஸ்ரக்தராமாலிகை அனுப்பியிருக்கிறேன். உம்முடைய க்ரந்தத்தைப்பற்றியும் தோன்றின சில ச்லோகங்களை இத்துடன் அனுப்புகிறேன். உம்முடைய க்ரந்தம் அச்சாகி வெளிவந்து மகிழ்விக்கத் திக்கதே.

न्यायवेदान्तविद्यार्थिना श्रीमता सद्गुरुश्रीपदाम्भोजसंसेविना ।
निर्मितां षड्रहस्याभिधां सत्कृतिं वीक्ष्य मोदाम्बुधौ मग्नचित्तोऽस्म्यहम् ॥१॥

ஸதாசார்ய ஸ்ரீபாதஸேவா ரஸிகரான ந்யாயவேதாந்த வித்யார்த்தி இயற்றிய ஆறு ரஹஸ்யமென்னும் சிறந்த நூலைக்கண்டு மிகவும் களித்தேன். ... ... (1)

चिन्नजीयर्समाख्याख्ययोगीश्वरा अप्यमेयादरेणाभ्यनन्दन् भृशम् ।
सुष्ठु संदर्शितैस्सत्प्रमाणैस्तथा युक्तिभिश्चाखिलाः पण्डिता हर्षिताः ॥२॥

ஸ்ரீமத் சின்னஜீயர் ஸ்வாமியும் மிகவுமாதரித்துக்கொண்டாடியருளினர். சிறந்தப்ரமாண யுக்திகள் காட்டப்பட்டிருப்பதனால் பண்டிதர்களனைவரும் மகிழ்விக்கப்பட்டிருக்கிறார்கள். (2)

षोडशाध्याय्यभिख्याख्यकृत्यां परैः क्रोधसंमूर्च्छितैर्यदालिख्यत ।
तत्तदत्यद्भुतोक्तिप्रपञ्चैः क्षणात् भस्मसात्कृत्य संश्लाघनीयोऽसि नः ॥३॥

ஷோடசாத்யாயி யென்னும் புத்தகத்தில் சிலர் சீறிச்சிவந்து எழுதினதை யெல்லாம் சிறந்த ஸ்ரீஸூக்திகளைக்கொண்டே விரைவில் பொடிபடுத்திய நீர் நம்போல்வார் கொண்டாட நிற்கின்றீர். ... ... ... .... (3)

वादिवादानशेषानपि स्वादुभिः सूक्तिवृन्दैर्भवान् साधु निर्मूलयन् ।
वर्धतां वर्धतां साधु संवर्धतामित्यशेषैर्बुधैश्शस्यतां विन्दति ॥४॥

வாதியினுடைய எல்லாவாதங்களையும் மதுரமான மொழிகளாலேயே நன்கு நிரஸித்ததனால் ஸகல பண்டிதர்களும் பல்லாண்டு பாடநிற்கின்றீர். .... (4)

वादिभीकृद्गुरोर्वंशवारान्निधौ कौस्तुभाभो गुरुर्यो विभाति क्षितौ ।
तस्य सूक्तीर्भृशं श्लाघमानो जनः श्लाघ्यतामेति चेद्विस्मयः कोऽत्र भोः ॥५॥

ப்ரதிவாதி பயங்கர குலமணியாய்த் தோன்றித் திகழ்கின்ற ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்திகளை ச்லாகித்து எழுதுமவர்க்கு இப்படிப்பட்ட கொண்டாட்டம் விளைகின்றதென்றால் இதில் ஆச்சரியமென்கொல்! ... .... (5)

विद्वदीड्योक्तिभिर्विश्वमाह्लादयन् सूरिराट् सोऽनिशं भातु भूमौ महान् ।
तद्गिरां क्षेपणे सक्तचित्तान् जनान् नित्यभग्नांश्चिरं वीक्ष्य मोदेमहि ॥६॥

வித்வான்கள் மகிழ்ந்து புகழ்த்தக்க ஸ்ரீஸூக்திகளினால் உலகமுழுவதையும் களிக்கச்
செய்கின்ற ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி நெடுநாள் நிலவுலகில் வாழ்க; அவருடைய
ஸ்ரீஸூக்திகளையுகவாமல் மறுக்குமவர்கள் நிச்சலும் பங்கமடைந்து கொண்டிருக்கும் நிலைமை
யையும் நெடுநாள் கண்டுகொண்டு களித்திருப்போமாக. ... ... (6)

इत्थं श्रीभट्टनाथार्यदिव्यदेशनिवासिना । साधुश्रीशैलविदुषा सानन्दं विनिवेदितम् ॥

ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழும் ஸாதுகோஷ்டி திருமலை ஐயங்காரால் ஆனந்தத்தோடு
இவ்வனம் தெரிவிக்கப்பட்டது.

திருப்பதி 10—6—49

மே. வா. திரு.

(ஸ்ரீவில்லிபுத்தூர். நாடகசாலைத் தெரு.)

---

ஸ்ரீ. உ. வே. வித்வான். ஸ்ரீரங்கம் திருமலை

## வேதவ்யாஸபட்டர் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

அபசப்தலேசமுமில்லாத அஷ்டாத்யாயியை நோக்கி அபசப்தமயமாக வேஷாடசாத்
யாயி யென்றொரு புத்தகம் தோன்றினது ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் ஹ்ருதயத்
தைக் கலக்குவதற்கேயாயிற்று. அப்படி கலங்கி வருந்தின ஸ்ரீவைஷ்ணவர்க ளெல்லாரும்
திருவுள்ளமுகந்து உண்மையாகவே உள்ளமுருகிக் கொண்டாடும்படி யமைந்தது இந்த ஆறு
ரஹஸ்யமென்கிற க்ரந்தம். இதிலுள்ள ஆறுபகுதிகளும் எம்பெருமானுடைய ஷாட்குண்
யம்போல் பரமாநந்த ஸந்தாயகமாகவும் ஸ்ரீஸுதர்சந சதகத்திலுள்ள ஆறு பரிச்சேதங்கள்
போல் ப்ரதிபக்ஷிபக்ஷப்ரதிக்ஷேபக்ஷமமாகவும் அமைந்திருக்கிற அழகு எழுதிமுடியாது.
எத்தனை தடவை வாசித்தாலும் தெவிட்டாத அமுதம் இதுவே.

(12—6—49.)

வே. திருமலை. பட்டர் திருமாளிகை, கோயமுத்தூர்.

---

ஸ்ரீமான் T. C. A. (திருமலை அனந்தான் பிள்ளை) ஸ்ரீநிவாஸவரதாசார்யர். அஸிஸ்
டெண்ட் கமிஷனர், ஆகோலா. இவர்மிக அற்புதமாக எழுதுகின்றார்—

......நான் விரும்பாமலிருக்கத்தாமாகவே தம்முடைய புத்தகத்தைப் புத்தூர்வக்கீல்
எனக்கு அனுப்பியிருந்தார். அவருடைய செய்தியைக் கண்டித்து அவர்க்கே பதில் எழுதி
யிருக்கிறேன். அவர் தம்முடைய வாதங்களை ஆதரித்துத் தமக்கு அபிப்பிராயம் தரவேணு
மென்று புத்தகத்தில் கோரியிருக்கிறார். த காலம் தென்னாட்டில் பரிகணிதர்களாயுள்ள
பெரியார்கள்பலரும் அவருடைய வாதம் ஏற்கத் தக்கதன்றென்றும், அஷ்டாத்யாயியில்
கூறியிருப்பதே ஏற்கத்தக்கதென்றும் சிறந்த ஆராய்ச்சிகளுடன் அபிப்ராயம் தெரிவித்திருப்
பதை அணிகலனில் கண்டேன். அந்தப்பெரியார்கள் இவருடைய நிந்தைச் சுவடியைப்
பார்த்து எப்படி தங்கள் அபிப்ராயத்தைமாற்றிக் கொள்வார்களென்று எனக்குப் புரியவில்லை.
அட்வொகேட் என்று இருக்குமவர் இவ்வளவு கூடத்தெரிந்து கொள்ளாமலிருக்கிறு
ரென்றால் இதைவிட ஆச்சரியம் ஒன்றிருப்பதாக நான் நினைக்கவில்லை. ஸ்வாமியை நான்
தூஷிக்கத்தான் போகிறேனென்றும், தூஷிக்கவேண்டியது அவசியந்தானென்றும் தானே
முகவுரையிட்டுக்கொண்டு, விவாதவிஷயத்திற்கு அடியோடு அவசியமில்லாத வழிப்போக்கான
விஷயங்களையெடுத்துக் கொண்டு எழுதியிருப்பது மல்லாமல், "ராஜகுமாரனுக்குப் பிடிதோறும்
நெய்யில்லாமல் சோறு இழியாது" என்று பெரியவாச்சான்பிள்ளை யெழுதுவதுபோல் வர்
தோறும் பெரியாருடைய தூஷணையில்லாமல் தமக்குச் செல்லாது என்பதை வியக்தமாகக்
காட்டிக்கொண்டு யாவரும் அருவருக்கும்படியான நிந்தைகளையே நிரப்பிவிட்டு இதற்குப்

பெரியார்கள் அபிப்ராயம் தாவேணுமென்று கேட்பதானது வெகு ஆச்சரியமாகவேயிருக்கிறது. இவருடைய நிந்தைக்கு பயப்பட்டுக்கொண்டு அபிப்ராயம் கொடுக்கமுன்வரக் கூடியவர்கள் விவேகிகளாக இருக்க நியாயமில்லை. விஷயத்திலுள் புகாமல் "நீர் எழுதியிருப்பதெல்லாம் சரியென்று நான் மெச்சுகிறேன்" என்றிப்படி சில உற்றாருறவினர் இவர்க்கு எழுதியனுப்பவும் அதையிவர் பெருமையாக வெளியிட்டுக் கொள்ளவுங் கூடும். அதுவும் அவரவர்கள் தாமேயெழுத நேராது.

ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியென்று பெயரிடப்பெற்ற புத்தகம் உண்மையில் இவ்வுலகுக்கெல்லாம் மகாநிதியேயாகும். ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்ய நூலில் ஷோடசாத்யாயின் பொய்யாகவும் தவறாகவும் உள்ள வாதங்கள் அத்தனையையும் ஒன்று விடாமல் கண்டித்தெழுதியிருக்குமழகு ஒவ்வொருவருடைய நெஞ்சையும் ஈர்க்கியே நிற்குமென்று நம்புகிறேன். பலவிடங்களில் என்னையுமறியாமல் சிரித்துச் சிரித்து, இப்படிப்பட்ட விஷயங்கள் வெளிவருவதற்கு அந்த வக்கீல் இடங்கொடுத்ததற்கு அவரைப் போற்றவேணு மென்றே எனக்குத் தோன்றியது. இப்படியே ஒவ்வொருவர்க்கும் தோன்றியே யிருக்குமென்பதிலும் சந்தேஹமில்லை. மணவாளமாமுனிகள் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானமருளிச் செய்ததைக்கண்ட அன்பர்கள் "மற்றவையும் கரையானுக்கு இரையாகியிருக்கக் கூடாதா?" என்று சொன்னார்களென்பதை நான் பலபெரியார்களிடம் கேட்டுப் புளகாங்கிதனாகியிருக்கிறேன். உண்மையில் மணவாளமாமுனிகளின் வியாக்கியானச் சுவையை அநுபவிக்க வல்ல ரஸிகர்கள் யாவர்க்கும் இன்றைக்கும் நாளைக்கும் இப்படியே தோன்றுமென்பதை என் அநுபவத்தினால் நிச்சயமாகக் கூறுவேன். இதனால் பெரியவாச்சான்பிள்ளைக்கு இறையும்பழிப்பு ஏற்படாதென்பதை அதிகமான படிப்பில்லாதவர்களும் சுகமாக அறிய முடியுமே. ஒரு வக்கீலின் மூளைக்கு இது ஏறவில்லையென்றால் வீண்பிடிவாதமே இதற்குக் காரணமென்ன வேண்டும். 'சிக்குத்தலையன்—பிச்சையுண்ணி" என்கிற சொற்களைப்பற்றி மணவாளமாமுனிகள் திருவுள்ளம்பற்றியதை நான் 17-வருஷங்களுக்குமுன்பு ஒரு வடகலை வித்வானுடைய உபந்யாசத்தில் கேட்டுக் கண்ணீர் சொரியநின்றேன். அவருடைய ஒப்பில்லாத ஸாத்விகத் தன்மையை விளக்குகின்ற இந்த உலகறிந்த ஐதிஹ்யத்தை வக்கீல் தூஷிப்பதும் 'எதைப்பிடித்துக்கொண்டு தூஷிக்கலாம்' என்று தேடிப்பார்க்கும் தன்மையினாலேயே யென்று நன்றாக அறியலாம், அவருடைய ஒவ்வொரு விஷயமும் இப்படித்தானிருக்கிறது. இப்படிச் சொல்லுவதைப்பற்றி அவர் ஒவ்வொருவரையும் நிந்திக்கவே போகிறாரென்பதையும் அறிவேன். அதனாலென்ன? அவருடைய நிந்தைக்கு அஞ்சி யாரும் உண்மையை மறைக்க முடியாதன்றோ. சதாத்யாயீ, ஸஹஸ்ராத்யாயீ என்று அவர் பெயரிட்டு உலகம் முழுவதையும் எவ்வளவும் வையலாம். அதற்கு பதில் எழுதுகிற வியாஜத்தினால் மஹான்கள் அனேகமான அபூர்வவிஷயங்களை உலகுக்கு ஊட்டுவார்களென்கிற நம்பிக்கை எனக்கு உண்டு.

ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்யத்தில் ஒவ்வொருபகுதியும் மிக இனிதாக இருக்கின்றது. நம்மாழ்வாருடைய ஒரு பாசுரத்தில் "தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே" என்றது எனக்கு நினைவுக்கு வந்தது. முதல் அதிகாரம்—தேன்; இரண்டாமதிகாரம்—பால்; மூன்றுமதிகாரம்—நெய்; நான்காமதிகாரம்—கன்னல்; ஐந்தாமதிகாரம்—அமுது. இனி ஆறுமதிகாரத்திற்கு எதையொப்பிடலாமென்று பார்த்தேன்; தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமான ஐந்தையும் சேர்த்து ஒப்பிடலாமென்றே தோன்றியது. உண்மையில் அவ்வளவுதித்திக்கின்றது ஆறுமதிகாரம். ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் இது அரிய பெரியவிருந்து என்றே உள்ளபடி சொல்லுவேன்.

அடுத்தபடியாக ஆங்கிலத்தில் ஒருவியாஸம் எழுதி அதை நானே அச்சிட்டு ப்ரசுரம் செய்ய நினைத்திருக்கின்றேன்.

சிறியேனான அடியவன்,

**Akola. 9—6—49.** **T. C. A. பிச்சு.**

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

सत्संप्रदायनिष्णातान् श्रीवैष्णवशिखामणीन् । प्रहर्षयितुमेवाहं प्रवृत्तोऽस्मि तदाज्ञया ॥

ஸத்ஸம்ப்ரதாய நிஷ்ணாதாந் ஸ்ரீவைஷ்ணவசிகாமணீந்,

ப்ரஹர்ஷயிதுமேவாஹம் ப்ரவ்ருத்தோஸ்மி ததாஜ்ஞயா.



# ஆச்சான்பிள்ளையாறுரஹஸ்யம்.

**(ந்யாய வேதாந்த வித்யார்த்தி. காஞ்சி கிடாம்பி ஸ்ரீநிவாஸவரதார்யன் எழுதியது.)**

**(ஆச்சான் பிள்ளை விஷயமான சர்ச்சையில் ஆறு ரஹஸ்யங்களையுணர்த்தும் நூல் இது.)**

## முகவுரை.

ஓங்கியுலகளந்த வுத்தம கீர்த்தி பெற்ற ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி யென்னும் சிறந்த க்ரந்தத்திற்குப் பிரதியாக ஷோடசாத்யாயி யென்கிற நூலொன்று வெளிவந்திருக்கின்றது. அஷ்டாத்யாயியை ஸேவித்தவர்கள் யாவரும் அந்த ஷோடசாத்யாயியையும் பார்த்து இரண்டினுடையவும் அமைப்பிலுள்ள தாரதம்யத்தை நன்றாக அறிந்திருப்பார்கள். அஷ்டாத்யாயியில் ஒன்றிரண்டு தூஷணைகளாவது தலைகாட்டியிருந்தால் ஒன்றுக்கு ஒன்பது சொல்லுவதென்கிற ரீதியில் எவ்வளவும் தூஷித்து எழுதலாம். விஷயங்களை மாத்திரம் விளக்கியிருக்கின்ற நூலை நோக்கித் தோன்றிய நூலில் ஆதி முதல் அந்தமளவும் நிந்தைகளையே நிரப்பியிருப்பது கொண்டே விஷய விசாரத்தில் வெற்றி பெற முடியாமல் நிந்தாத்யாயங்களிலேயே வெற்றி பெற நினைத்துவிட்டார் வக்கீல் ஸ்வாமி—என்பது வெளிப்படையாம். அவருடைய வெளியீட்டில் நிந்தையுள்ளதா, விஷய விசாரமுள்ளதா என்பதைப் பற்றி நாம் விசாரம் செய்ய வேண்டாதபடி அவரே உண்மையை உபக்ரமத்திலேயே (பாரா 7ல்) வெளியிட்டிருக்கிறார்; (அதாவது) ஸ்ரீராமாயணத்தில் பரதன் * ஜகர்ஹே ச புரோஹிதம் * என்கிறபடியே வஸிஷ்ட பகவானை தூஷித்திருக்கிறபடியாலும், "ஜாபாலிர் ப்ராஹ்மணோத்தம:" என்று கொண்டாடப்பட்ட ஜாபாலிமஹர்ஷியை சித்ர கூடத்தில் ஸ்ரீராமன் கந்துகணையில்லாமல் தூஷித்திருக்கிறபடியாலும், அந்த ஜாபாலியின் மீதுண்டான கோப வேகத்தினால் அவரை மந்திரியாகக் கொண்டிருந்த தசரத சக்ரவர்த்தியையுங் கூட "நிந்தாம்யஹம் கர்ம பிது: க்ருதம் தத்" என்று ஸ்பஷ்டமாக தூஷித்திருக்கிறபடியாலும் அவ்விருவரும் காட்டின

வழியைப் பின்பற்றியே நானும் P. B. A. ஸ்வாமியையும் அவரை கௌரவிக்கின்ற பெரியார்களையும் தூஷிப்பதில் ஒரு பாதகமுமில்லை என்று வெட்ட வெளிச்சமாக எழுதி விட்டே தூஷிக்க ஆரம்பித்திருக்கிறார். அதைப்பற்றி ஸகல ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தமும் வருந்துமே யொழிய ஸ்வாமியின் திருவுள்ளம் சிறிதும் வருந்தாது.

2. ஸ்ரீஸ்வாமி உலகுக்கு உண்மைப்பொருள்களையுணர்த்தவே தோன்றியவராதலால் தாம் செய்யவேண்டிய தொண்டை இப்போதும் ஒழுங்குபடச் செய்து முடித்திருக்கிறார். வித்வான்களும் விவேகிகளுமானவர்கள் எந்த விஷயங்களில் பதிலுரையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்ப்பர்களோ, அந்த விஷயங்களுக் கெல்லாம் ப்ராமாணிகமான பதிலுரையை ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி யென்னும் மிகச் சிறந்த க்ரந்தத்தினால் வெளியிட்டருளியுள்ளா ரென்பதை உலகம் முழுவது முணர்ந்தேயுள்ளது. அவசிய மற்றவையென்று ஸ்வாமியினால் உபேக்ஷிக்கப்பட்ட சில விஷயங்களிலும் தத்த்வத்தையுணர்த்த வேணு மென்று பெரியார்களின் கட்டளையைச் சிரமேற்கொண்ட வடியேன், வாடி மெலிந்து தளர்ந்து நிற்கும் வைணவவுலகை "வர்ஷேண பீஜம், ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" என்னும்படி பண்ணப் புகுகின்றேனிச் சிறு நூலையிட்டு.

3. ஸ்ரீபதரிகாச்ரம யாத்திரையாக வெகுதூரதேசம் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீஸ்வாமி திரும்பிவர இரண்டு மூன்று மாதங்களாகு மாகையால் அதுவரையில் நம்முடைய புத்தகம் ஓர் அபாயமுமின்றி ஜீவித்திருக்குமன்றோ வென்று நப்பாசை கொண்டார் ஷோடசர். [சிறு குறிப்பு :—இச்சிறு நூலில் ஷோடசாத்யாயீகாரரைக் குறிக்கவேண்டி வருமிடங்களில் ஷோடசர் என்கிற ஸங்கேதமான ஸம்க்ஷிப்தநாமத்தினால் குறிப்பிடுவோம்.] ஸூர்யன் கண்ணுக்கும் நெஞ்சுக்கு மெட்டாத தூரத்திலிருக்காலும் அவனது ப்ரபை எங்கும் பரந்து தன் செயலைச் செய்தே திருவதுபோல, ஸ்ரீஸ்வாமி எந்தநாட்டில் எவ்வளவுநெடுந்தூரத்திலெழுந்தருளியிருந்தாலும் அவருடைய தேஜோவிசேஷம் ஆச்சரியமாக எங்கும் பரம்பி * நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த எண்ணுந்தனகளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச் சிறப்பச் செய்யவேண்டுஞ் செய்கைகளைச் செவ்வனே செய்து தலைக்கட்டியே நிற்குமன்றோ.

ஸ்வாமியருளிச் செய்து வெளிவந்துலவும் ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியை முன்னே பூர்த்தியாக ஸேவித்து விட்டுப்பிறகு இச்சிறு நூலைவாசிக்கும்படி சிறியேன் வேண்டுகோள்.

4. நியாயாலய வியவஹாரங்களில் விவாதாம்சத்திற்குச் சம்பந்தப்பட்டவளவே பேச வேண்டு மென்றும் சம்பந்தப்படாதவை சிறுதும் பேசலாகாதென்றும் நியதியுள்ளமை ஷோடசர்க்குத் தெரியாததன்று; நன்கு தெரிந்ததே. க்ரந்தரசனைகளில் நியமமும் அத்தகைத் தேயாமென்பதையும் நன்கறிவரிவர். அறிந்து வைத்தும் பாந்தரஹஸ்ய விவாத விஷயத்திற்குச் சிறிதும் தொடர்பற்ற விஷயங்களையே அகாண்டமாகத் தேடிப்பிடித்துப் பற்றிக் கொண்டு அவற்றிலும் நேர்வழியினின்று நழுவி வாயெடுத்ததெல்லாம் வசவுமழையாகவே பொழிகிறார்.

5. அஸூயாதேவியின் ஆலிங்கனத்தைப் பெற்ற சிலர் ஸ்ரீஸ்வாமியை நிந்திக்கும் புத்தகம் ஏதாவது கிடைக்குமா வென்று அதுவேகண்ணாகத் தேடிப்பார்ப்பதும் அத்தகைய புத்தகம் கிடைத்து விட்டால் அமுத முண்டாற்போல் களிப்பதுமாயிருப்பார்கள். அன்னவர்களது அற்பசந்தோஷத்திற்கு மாத்திரமே யுதவும் ஷோடசருடைய சுவடி—என்னு முண்மையை இனி விரிவாக நிரூபித்துக்காட்டுவோம் ஒரு சிறு விஷயமும் விடாமல்.

முகவுரை முற்றிற்று.

# 1. ப்ரதான ப்ரமேயப்ரபஞ்சன ரஹஸ்யம்.

6. நிகழும் விவாதத்தில் உயிரானவிஷயம் எதுவோ அதுதன்னில் வேஷாடசருடைய அப்ராமாணிகத்வமும் அவர் அடைந்த பங்கமும் நன்கு நிரூபிக்கப்படுமதிகாரம் இது. ஸ்வாமி தூஷணையாக ஒரெழுத்துமெழுதாமலிருக்கவும் வேஷாடசர்தாம் தூஷணைகளையே மலியவிட்டதற்குக் காரணம் ஒன்றுகாட்டியுள்ளார்; பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்த பரந்த ரஹஸ்யத்தை அவரருளியதன்றென்று ஸ்வாமி யெழுதியதே நம்முடைய தூஷண ப்ரவ்ருத்திக்குக் காரணமென்று. இதற்கு முதன்முதலாக நாம் சொல்லுவதியாதெனில்: ஆளவந்தாரருளிச் செய்த சதுச்ச்லோகிக்கு ஆச்சான்பிள்ளை ஒரு விரிவான வியாக்யான மிட்டிருக்கிறார். அதை வேஷாடசர் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததாக நெடுங்காலம் ப்ரமித்திருந்து அந்தப்ரமத்தை உலகமுழுவதுமறிய வெளியிட்டும் வைத்து, இரண்டு மாதங் களுக்கு முன்பு "அந்த சதுச்ச்லோகீ வியாக்கியானம் நாயனாராச்சான் பிள்ளையருளியதே யொழியப் பெரியவாச்சான் பிள்ளையருளியதன்று; தவறாக நான் ப்ரமித்து வெளியிட்டு விட்டேன்; இதையாவரும் திருத்திக்கொள்ள வேண்டும்" என்று ஓர்திருத்தம் வெளியிட்டார் இந்த வேஷாடசர்தாமே. மதராஸ் அட்வொகேட், K. திருவேங்கடாசார்யர் ஸ்வாமி முதலான பெரியார்கள் இதை யெடுத்துக்காட்டி யெழுதியிருக்கும் விஷயங்கள் யாவரும் கண்டவை. தவிர, திருமலை அனந்தாண் பிள்ளை ஸ்ரீசைலக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி வேஷாடசரைநோக்கி விடுத்திருந்த பத்திரிகையில்,



"சதுச்லோகீவியாக்கியானம் மணிப்ரவாளத்தில் ஒன்றுண்டு என்று தேவரீருக்கு எத்தனை நாளாகத் தெரியும்? அது பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததென்று நம்பியிருந்தகாலம் எவ்வளவு? ஆராய்ச்சியில்லாமல் ஸாதாரணமாக நம்பியிருந்ததுதானோ? ஆராய்ச்சி செய்து அப்படி நம்பியிருந்ததா? அந்த நம்பிக்கை தவறான ப்ரயத்தினாலான தென்கிற தோற்றம் தேவரீருக்கு எப்போது உண்டாயிற்று? அது ஏதோவொரு ஆராய்ச்சியினால் தானே யுண்டாகியிருக்கவேண்டும் அந்த ஆராய்ச்சியின் ஸ்வரூபம் எப்படிப்பட்டது? இதற் கெல்லாம் ருஜுவாகவும் தெளிவாகவும் பதில் வெளியிட்டால்தானே ஜிஜ்ஞாஸுக்களுக் குப் பரிபூர்ணத்ருப்தியுண்டாகும். ஆராய்ச்சி எதுவும் காட்டாமலே இது பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததென்று ஒருநாள் வெளியிடுவதும், மற்றொரு நாள் அது தவறு, சிறிய வாச்சான் பிள்ளை தானருளிச் செய்தது என்று வெளியிடுவதுமாயிருந்தால் அதை உன்மத்த ப்ரலபிதமென்றுதானே உலகங்கொள்ளும்; இதற்கு முடிவுண்டோ?"

என்று எழுதப்பட்டுள்ளது. நிகழும் விவாதத்தில் மேலே காட்டின விஷயமே மிக முக்கியமானது. வேஷாடசர் (பாரா 77ல்) ஷை பத்திரிகை தமக்குக் கிடைத்ததாக வெகு ஸம்ப்ரமமாய் எழுதியிருக்கிறார். அதைப்பற்றி ஏதாவது வாய் திறந்திருக்கிறாரா வென்று பாருங்கள். "தேள் கொட்டின திருடன் போல்" என்று உலகில் வழங்கும் பழமொழி யொன்றுண்டே; அந்த விதமாக அடங்கியிருக்கிறாரென்பது வெளிப்படை. "மனிதர்களுக்கு ப்ரமம் ஸஹஜமாகையாலே பலகாலம் ஆராய்ச்சி யில்லாமல் ப்ரமித் திருந்தேன், ஒருகால் ஆராய்ச்சியினால் ப்ரமம் தெளிந்தேன்; அதனால், பெரிய வாச் சான் பிள்ளை யருளிச் செய்யாததை அவர் அருளிச் செய்ததாக வெளியிட்டிருந்த தற்கு நான் அநுதபித்து திருத்தம் வெளியிட்டுக் கொண்டேன்" என்று வேஷாடசர் உண்மையான பதில் வெளியிட்டிருக்க வேண்டும். இப்படியல்லது வேறுவிதமான பதில் இவரால் ஒருநாளும் வெளியிட முடியாது. ஏதோ வொருபதிலை இவர் அவச்யம் வெளியிட்டிருக்க வேண்டும். இனியாவது வெளியிடட்டுமே.

7. பெரிய வாச்சான் பிள்ளை யருளிச்செய்யாத பரந்த ரஹஸ்யத்தை அவர் அருளிச் செய்ததாக வெளியிட்டிருந்து பிறகு சிறந்த ஆராய்ச்சிகளினால் உண்மையான விஷயத்தை வெளியிட்டதற்காக ஸ்வாமியை ஆக்ஷேபிப்பது யுக்தமாயிருந்தால்—பெரிய வாச்சான் பிள்ளையருளிச் செய்யாத சது ச்லோகீ வியாக்கியானத்தை அவரருளிச் செய்ததாக

வெளியிட்டிருந்து பிறகு உண்மை தெளிந்து பழைய் அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டதாகத் தாமே வெளியிட்ட வேஷாடசர் முன்னம் தம்மைத்தாமே நிந்தித்து ஒரு வேஷாடசாத்யாயி வெளியிட்டுக் கொள்ள வேண்டியது அவசியமல்லவா? ஏன் அது செய்யவில்லையிவர்? இதற்கு முன்னே உலகமுகக்க பதில் தெரிவித்து விட்டு வேறு வேலை பார்க்க வேண்டும் வேஷாடசர்.

8. ஸகலவித்வான்களும் கண்டு களித்து ஆச்சரியமான மதிப்புரைகள் கொடுக்கும்படியான திவ்யக்ரந்த மருளிச் செய்த ஸ்வாமியை தூஷிப்பதற்கு வேஷாடசர் காட்டின காரணமீ மிகத்தவறு என்று முடிந்தது. இன்னமும் பரந்த ரஹஸ்யமே பெரியவாச்சான் பிள்ளையே யருளிச் செய்தது தென்று வீண்பிடிவாதங் கொண்டு வம்புக்கிழுத்து பேசுகின்ற வேஷாடசர் மணவாள மாமுனிகளை தூஷிப்பவர்களில் தலைவராய் நிற்கிறார். 'பெரியவாச்சான் பிள்ளை வேறு வ்யக்தி, ஆச்சான் பிள்ளை வேறு வ்யக்தி' என்கிற உண்மை மணவாள மாமுனிகளின் ஒரு ஸ்ரீஸூக்தியினால் தான் நிஸ்ஸந்தேஹமாக நிலை நின்றிருக்கிறது. அது நம் ஸ்வாமியின் அஷ்டாத்யாயியிலும் முப்பத்திரண்டு மொழி மாலையிலும் வெகு விசதமாகியிருக்கிறது. அதைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் இங்கெடுத்துக் காட்டுகிறேன்.

9. தத்வத்ரயத்தில் 10?-ஆம் சூர்ணையின் மணவாள மாமுனிகளின் விரிவான வியாக்யானத்தில்—ஆச்சான் பிள்ளையருளிச் செய்த ஆவரண க்ரமத்தையும் வாதிகேஸரி ஜீயர் கூறிய ஆவரண க்ரமத்தையும் விரிவாக எடுத்துக் காட்டிவிட்டு, உடனே,

> **"இப்படி பூததந்மாத்ர ஸ்ருஷ்டி சொல்லுகிற விடத்திலே ஆவரண க்ரமம் வக்தவ்யமாயிருக்கச் செய்தேயும் அருளிச் செய்யா தொழிந்தது அபேக்ஷித மல்லாமை யன்று; ஸங்கோசேந உத்பத்திக்ரமத்தை யருளிச்செய்தாரித்தனை. பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது"**

என்று முடித்திருக்கிறார் மாமுனிகள். இந்த ஸ்ரீஸூக்தியில்—"இப்படி" என்றதற்கு என்ன பொருளென்றால்—"ஆச்சான் பிள்ளையும் வாதி கேஸரி ஜீயரும் விவரித்துரைத்த வண்ணமாக" என்பதே பொருள்; வேறு ஒருவிதமான பொருளும் ஒருவருடைய புத்தியிலும் ஏறாது; ஏறிட்டுரைக்கவும் முடியாது. அப்பொருள் கொண்ட சொல் பொதிந்த வாக்யத்தின் முடிவில் "**பெரியவாச்சான் பிள்ளையு மிப்படியிறே அருளிச் செய்தது**" என்றுள்ள ஸ்ரீஸூக்தியில் கீழ்ச்சொன்ன ஆச்சான் பிள்ளையையே பெரியவாச்சான் பிள்ளை யென்று நிர்தேசிப்பதாக மந்தமதியும் பேசமாட்டான்.

> **"ரங்காசார்யரும் ராகவாசார்யரும் விரிவாகப் பேசினார்கள்; வரதாசார்யர் சுருக்கமாகப் பேசினார். ஸ்ரீரங்காசார்யரும் இப்படியன்றோபேசினது"**

என்றொரு வாக்கியம் வைத்துக் கொள்ளுங்கள்; இந்தவாக்கியத்திற்கும், மேலே காட்டின மணவாள மாமுனிகளின் வாக்கியத்திற்கும் அணுவளவும் பேதம்கிடையாது. நாம் காட்டியுள்ள வாக்யத்தில் "ஸ்ரீரங்காசார்யரும் இப்படியன்றோ பேசினது" என்ற விடத்துள்ள ஸ்ரீரங்காசார்யரும் வாக்யத்தின் முதலிலேயுள்ள ரங்காசார்யரும் ஒரேவ்யக்திதான் என்று பேதையனும் பேசகில்லான்.

10. மாமுனிகள் இருபத்திரண்டிடங்களில் ஆச்சான் பிள்ளை யென்றே அருளிச் செய்துவைத்து இந்த ஓரிடத்தில் மாத்திரம் பெரியவாச்சான் பிள்ளையென்று ஏன் அருளிச் செய்கிறார்? இருபத்திரண்டிடங்களில் ஆச்சான்பிள்ளை யென்ற சொல்லால் குறித்த வ்யக்தியையே இந்தப் பெரியவாச்சான் பிள்ளையென்ற சொல்லாலும் குறிக்கிறாரென்று சொல்லும் பக்ஷத்தில், 22 இடங்களில் (பெரிய) என்கிற விசேஷணத்தை விட்டு ஸாமான்யமாக அருளிச் செய்து வந்த மாமுனிகள் இந்த வோரிடத்தில் மாத்திரம் எதுக்கு அந்தப் பெரிய விசேஷணத்தைக் கூட்டியருளிச் செய்தாரென்கிற ஆராய்ச்சி ஒவ்வொரு விவேகிக்கும்

தோன்றியே தீருமே. இதற்கு ஷோடசர் கூறும் காரணம் ஸர்வாத்மநா அபஹாஸ்ய மென்று முப்பத்திரண்டு மொழிமாலையில் ஸ்வாமியால் நன்கு நிரூபிக்கப்பட்டுளது. (பெரிய) என்றதற்கு தேஹத்தில் பெருமையோ, வாக்கில் பெருமையோ, ஞானத்தில் பெருமையோ எதுவும் பொருளன்று; வயதில் பெருமை யொன்றுதான் பொருள். பெரியநம்பி, பெரியாண்டான், பெரிய தோழப்பர், பெரிய ஜீயர் முதலான எந்தவ்யபதேசத்திலும் (பெரிய) என்பதற்கு இவ்வளவே பொருளென்பதை ஸம்ப்ரதாயம் வல்ல பெரியார் யாவருமுணர்வர். இவன் பெரிய குமாரன், இவன் சின்ன குமாரன் என்றால் இங்குபெரியவுக்கு என்ன அர்த்தமோ அதுவே மொழிய இங்கும் வேறுபொருள் கிடையாதென்பது நிர்விவாதம். வெகு விஸ்தாரமாகப்பேசுகிறவர் என்கிற காரணத்தினால் (பெரிய) என்கிற விசேஷணம் அவர்க்கு ஏற்பட்டதென்றும், அப்படி விஸ்தாரமாகச் சொல்லவல்ல பெரியவரும் இங்கே சுருக்கமாகவே சொல்லியுள்ளாரென்பதே இங்கு விவக்ஷிதமென்றும் சொல்லுவதானால் தாராளமாகச் சொல்லட்டும். இதைக் கண்டித்தேயாக வேண்டிய அவச்யமுமில்லை. இப்பொருளிலும், 22 இடங்களில் ஆச்சான்பிள்ளை யென்றே குறிக்கப்பட்ட ஆசிரியரைக் காட்டிலும் பெரியவாச்சான் பிள்ளை வேறுபட்டவரே என்பதுதான் நன்கு ஸித்திக்கும். விரிவாகச் சொல்லாமல் பிள்ளைலோகாசார்யரைப்போல் சுருக்கமாகச் சொன்னவர் ப்ரக்ருதத்தில் ஆச்சான் பிள்ளையல்லாதலால்.

11. இப்படி பசுங்குழந்தைக்கும் புலனாகும்படி நிரூபிக்கப்பட்ட இந்த விஷயம் தவறுதலாக இருந்தால் இது தவறு என்று தெரிவிக்க வேண்டிய அதிகாரம் ஷோடசருடைய தன்று, காலக்ஷேப நிர்வாஹகர்களான மத்யஸ்த மஹான்களுடையது. அப்படிப்பட்ட மத்யஸ்த மஹான்கள் பலர் நம்ஸ்வாமி க்ரஹித்தது தான் யதார்த்தமானதென்று அணிகலன் முகமாக வெளியிட்டாயிற்று. அப்படிப் பட்ட பெரியார்களை ஷோடசர்தாம் நிந்திப்பதற்கு ஒரு * காரணம் காட்டுகிறார். (அதாவது) பாரா 81ல், "அஷ்டாத்யாயிக்கு பதிலாக அடியேன் ஏதாவது எழுதுகிறேனா என்பதை கவனிக்காமலும்" என்கிறார். அட்வொகேட்டென்று பெயர் பெற்றிருக்குமொருவர் இப்படியெழுதுவதைப்பற்றி நாம் என்ன சொல்வது? அஷ்டாத்யாயிக்கு பதிலாக இவர் என்ன எழுதுகிறாரென்பதை வித்வான்கள் பார்த்திருக்க வேண்டுமாம். அப்படியே ஷோடசருடைய நூலுக்கு பதிலாக ஸ்வாமி என்ன எழுதுகிறாரென்பதையும் வித்வான்கள் பார்த்திருக்கவேண்டாவோ? வேண்டியது தான். அதற்கு மேல் ஷோடசர் என்ன எழுதுகிறாரென்பதையும் வித்வான்கள் பார்த்திருக்க வேண்டியது தான். அதற்கு மேல் ஸ்வாமி என்ன எழுதுகிறாரென்பதையும் பார்த்திருக்க வேண்டியது தான். இதுதான் வித்வான்களுக்கு வேலை போலும். "நானெழுதுவதை எதிர் பார்த்திராமல் எப்படிநீங்கள் ஸ்வாமிக்கு அபிப்ராயம் கொடுத்தீர்கள்?" என்று ஷோடசர் வையவேண்டும்; இப்படியே "நானெழுதுவதை எதிர்பார்த்திராமல் எப்படி நீங்கள் ஷோடசர்க்கு அபிப்ராயம் கொடுத்தீர்கள்" என்று எதிர்த்தலை வையவேண்டும். இப்படி உபயபக்ஷத்திலும் வசவுண்பதற்கே வித்வான்கள் வீற்றிருக்கின்றனர் போலும்.

12. ஆனால் "ஷோடசர்க்கு எப்படி அபிப்ராயம் கொடுத்தீர்கள்?" என்று கேட்பதற்கு வைவஸ்வத மந்வந்தரே கலியுகே ஸர்வேஷு பாதேஷு ஒருநாளும் ப்ரஸக்தி ஏற்பட மாட்டாதென்பது திண்ணம். யாவஜ்ஜீவம் வித்வான்களை நிந்திக்க வேண்டிய க்ருத்யம் ஷோடசர்க்கே அஸாதாரண மென்பதை நிஸ்ஸந்தேஹமாய் நியமேந பார்க்கலாம். ஷோடசர் பாரா 41 முடிவில் "ஸ்ரீரங்கத்திலெழுந்தருளி யிருக்கும் கோவிந்தாசார்ய ஸ்வாமி தெரிவித்தார்" என்கிறார். ஸ்ரீமான் உவே—வித்வான்—இத்யாதி விசேஷணங்களில் ஒன்று மெழுதாமல் யாரோ வழிப் போக்கர்களைக் குறிப்பது போல் வெறும் பெயரை மாத்திரம் குறிப்பிட்டு அவஜ்ஞையாக இவர் எழுதும் மருமம் தெரியுமோ? கோயிலில் உபய வேதாந்த நிர்வாஹகரா யெழுந்தருளி யிருக்கின்ற வித்வான். ஸ்ரீகோவிந்தாசார்ய ஸ்வாமி பரமப்ராமாணிகராகையாலே அந்த ஸ்வாமியும் இந்த ஷோட

சருடைய குத்ஸிதவாதத்திற்கு அபிப்பிராயம் கொடுக்க மாட்டாராகையாலே நாளைக்கே அந்த ஸ்வாமியும் தம்முடைய நிந்தனைக்கே ஆளாகப் போகிறாரென்பதை நிச்சயித்துக்கொண்டு, இப்போது அவரை கௌரவித்து விட்டால் பிறகு மஹாஸங்கடமாகு மென்று எண்ணியே இன்ன வ்யக்தி யென்று விளக்காமலே யெழுதி வைப்போமென்று ஸாமான்யமாக எழுதி வைத்திருக்கிறார். வேஷாடசர் பாரா 22ல்.—

"பயங்கார் என்ற பெயருக்குப் பொருத்தமாக பயத்தை விளைவிக்கிறீர். ஸ்வாமிக்கு பயப்படாதவர் ஒருவரிருவரேயுளர். 'அந்தோ! நம் கிரந்தங்கள் பயங்கரரால் பறிமுதல் செய்யப்பட்டுவிடுமோ? நம்மை நாட்டுமானிடருக்கும் தாழ்வாகச் சொல்லிவிடுவரோ, என்றும் இன்னும் பலவிதமாகவும் நினைத்து, பரமாசாரியர்களும் ஸ்வாமியிடம் பயப்படுகிறார்களென்றே நினைக்கிறேன்"—என்று.

13. மஹாவிவேகிகளே! எது ஸத்யமோ அதுவே வேஷாடசருடைய வாக்கில் பரவசமாக வெளிவந்துவிட்டதென்பதில் ஸந்தேஹமுண்டோ? மேற்குறித்த இவரது வாசகங்களில் அபத்தலேசமுமில்லையே. நடவடிக்கையிலுள்ளதைத்தான் சிறிதும் மறைத்திடாமல் எழுதியுள்ளார். சூர்ப்பணகையின் வாக்கில் "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ, கந்தர்வராஜப்ரதிமௌ பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ" இத்யாதிகள் விவசமாக வெளிவந்தது போலவும், மாரீசன் வாக்கில் "அப்ரமேயம் ஹி தத்தேஜ:" "ரகாராதீநி நாமாநி த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே-ரத்நாநி ச ரதாச்சைவ—வ்ருக்ஷேவ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம்" இத்யாதிகள் வந்தது போலவும் இவருடைய வாக்கிலும் வந்திருப்பவை உண்மைக்கு மிகவொத்தனவாய் உலகம் போற்றத் தக்கவைகளேயன்றோ.

14 *மாயிமதங்கஜமஸ்தக கோடபாடந பாடல பாணிதலோ ய:, ச்ருத்யடவீகுஹரேஷு ஸமிந்தே ஸ ப்ரதிவாதி பயங்கரஸிம்ஹ:* என்று ஸதஸ்ஸுக்களிலே நாடோறும் நல்லார்நன்கு போற்ற நின்று வெற்றிபெறுகின்ற வைபவத்திற்கு வேஷாடசர் வயிறெரிந்து வைது வல்லவாபழித்து எழுதினாலும் உண்மையுரையே வெளிவந்திட்டதென்று உகப்போம். ப்ராமாணிக விஷயங்களைப்பற்றி ஆங்காங்கு நூற்றுக்கணக்காயும் ஆயிரக்கணக்காயு முள்ள பண்டிதர்களும் வித்வான்களும் எத்தனையோ க்ரந்தங்களையும் வியாஸங்களையும் எழுதி வெளியிட்டுக்கொண்டுதானிருக்கிறார்கள். அவர்களுக்கு ஸ்வாமியிடத்தில் பயப்ரஸக்தியுமில்லை, பயப்பட்டுநிற்கவுமில்லை. அப்ராமாணிக விஷயங்களில் தலையிட்டுத் தப்பும்தவறுமாக எழுதுகிறவர்களும் எழுதினவர்களும் 'ஆளியைக்காண்பரியாய் அரிகாண் நரியாய்" என்று திருவாய்மொழியில் நம்மாழ்வாருளிச்செய்த த்ருஷ்டாந்தப்படியே படாதனபட்டு அஞ்சி நடுங்கிக்கொண்டே காலங்கழிக்கின்றார்களென்பது வாஸ்தவமாதலால், மேலே நாமெடுத்துக்காட்டின வேஷாடசருடைய வார்த்தைகள் அத்தனையும் யதார்த்தமே. தப்பாக எழுதினவர்களின் க்ரந்தங்கள் யாவும் வேஷாடசருடைய சுவடிகள்போலவே பறிமுதல் செய்யப்பட்டிருப்பதும்; அவர்கள் நாட்டுமானிடர்க்கும் தாழ்வாக எண்ணப்பட்டிருப்பதும் ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யமாகையால் வேஷாடசாத்யாயியில் இதுவொன்றே ஸத்யோக்தியென்று ஸந்தோஷிப்போம்.

15. 'நமக்கும் அக்ஷராப்யாஸமாயிருக்கிறது; நாமும் சிலபுத்தகங்கள் வாசித்திருக்கிறோம், நாமும் க்ரந்தமெழுதத்தொடங்கலாம்' என்றெண்ணி அநதிகாரிகளும் க்ரந்தமெழுதக் கைவைத்தால் வேஷாடசர்படுகிறபாடுதானே அவர்களும்பட வேண்டியதாகிறது. ஒன்றுபாருங்கள்; இவர் பாரா 38ல் "சற்றேறக்குறைய ஸமகாலத்திலிருந்தபடியால்" என்று ஒருவார்த்தையெழுதியுள்ளார். இது அசடுகள் எழுதுகிற வார்த்தையேயொழிய க்ராந்திகவார்த்தையன்று. 'சற்றேறக்குறைய ஸமவயஸ்கர்' என்றால் அது பொருத்தமான வார்த்தை. 'சற்றேறக்குறைய ஸமகாலத்தவர்' என்றால் இது அசட்டு வார்த்தையேயாகும். தேவதத்தன் 90 வயதுள்ளவனாயிருக்கும்போது யஜ்ஞதத்தன் 30, 40 வயதுள்ளவனாயிருக்கிறானென்று கொள்வோம்.

இவ்விருவரையும்பற்றிப் பேசவேணுமானால் "இருவரும் ஸமகாலத்தவர்கள்" என்று சொல்ல வேண்டுமேயல்லது இதில் (சற்றேறக்குறைய) என்றுசேர்த்தால் யத்யபிதேதாபிநதையாய் முடியுமத்தனை. காலமென்பது ஜீவிதகாலம். யஜ்ஞதத்தனுடைய ஜீவிதகாலமும் தேவதத்தனுடைய ஜீவிதகாலமும் ஸமமேயொழிய விஷமமல்ல. அது சற்றேறக்குறைய விருந்ததென்றால், "பகல் பன்னிரண்டுமணிக்கு நான் படுக்கையைவிட்டெழுந்தாலும் உதயோபஸ்தானம் தவறமாட்டேன்" என்பவருடைய வார்த்தைபோல் ஹாஸ்யரஸத்திற்கே ஆஸ்பதமாகுமத்தனை. ஷஷ்டிபூர்த்தியானபிறகும் மக்கள் பெறுவாருளரே; அந்தமக்களும் பிதாவும் ஸமகாலத்தவர்களேயொழிய சற்றேறக்குறைய ஸமகாலத்தவர்களல்லர். கண்ணனும் அர்ஜுனனும் சற்றேறக்குறைய ஸமவயஸ்கரென்றால் இதில் பொருந்தாமை சிறிதுமில்லை. ஜீவிதகாலம் சற்று ஏறிவிட்டாலும் சற்று குறைந்துவிட்டாலும் (ஸம) என்கிற சொல்லுக்குப் பொருளேகிடையாது. இப்படிப்பட்டவிஷயங்களை அவகாஹித்துக்கொள்ளத் தனிப்பட்ட வ்யுத்பத்தி வேண்டும்.

16. இன்னமும் வேஷாடசர் (பாரா 20ல்) "சட்டை க்ரந்தஸ்தமாக்கின வடக்குத் திருவீதிப் பிள்ளை" என்கிறார். இதற்கு ஏதாவது அர்த்தமுண்டோ? * தெள்ளியதாநம் பிள்ளைசெப்புநெறிதன்னை வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை எட்டிலே எழுதியருளப் பண்ணின பிறகு அந்தக்ரந்தத்திற்கு ஈடு என்று திருநாமமாயிற்றேயல்லது, முன்னமே ஈடு என்று ஒரு வஸ்து இருந்ததாகவும் அதை வடக்குத்திருவீதிப் பிள்ளை க்ரந்தஸ்தமாக்கினதாகவுங் காட்டியெழுதியிருப்பதானது அபஹாஸ்யம். கிம் பஹுநா? வேஷாடசருடைய பாஷையே விசித்திரம். (பக்கம் 27 ல்) 'நாம் தயாராயில்லை' என்கிறார். இது என்ன பாஷையோ? அநுவதிக்கவும் அருவருப்பாயிருக்கிறது. இப்படியெல்லாம் அஸங்கதமாகவும் அஸமஞ்ஜஸமாகவும் எழுதுகிறவர்களும் எழுதினவர்களும் பயங்காருக்கு பயப்பட்டே காலம் தள்ளுகிறார்களென்றால் இதில் அதிசயோக்திலேசமு மில்லையே. "ஐயோ அபசாரமாயிற்றே" என்று சொல்லவேண்டுமிடத்து "அபசாரஹேதுவாச்சுதே" என்று ஒரு வித்வான் சொல்லிவிட்டு அபஹாஸ்யமானது ஜகத்ப்ரஸித்தம். வ்யவஹார ஸௌஷ்டவமறியாத மிதஜ்ஞர்கள் ஏதோ ஏகாந்தமாகப் பேசுவதோடு நின்று பேனாவைப் பிடித்து எழுதுவதென்கிற பணியைக் கனவிலும் நினையாமலிருக்கவேண்டும். "சற்றேறக்குறைய ஸமகாலத்தவர்" என்கிற இதேவார்த்தையை இருபது வருஷங்களுக்கு முன்பு ம. ம. பண்டிதரொருவர் எழுதிவிட்டு அவஸ்தைப்பட்டு க்ஷாமணபத்ரிகையோடு கைகூப்பி நின்றகதைகளையெல்லாம் வேஷாடசர் காணுமையில்லை. கண்டுபயனென்கொல்? இயற்கையான விவேகமன்றோ உதவிபுரிந்துகாக்கும். அஃதில்லாதார்க்கு எங்குமெப்போதும் பரிபவமே பலிக்கு மென்கைக்கு ஸ்வாத்மைவ ஸாக்ஷியாதலால் வேஷாடசர் எழுதினது நன்று நன்றே. "ஸ்வாமிக்கு பயப்படாதவர் ஒருவரிருவரேயுளர்" என்கிறார் வேஷாடசர். 'ஒருவரிருவரிருக்கலாம்' என்னமல் 'உளர்' என்று எழுதியிருக்கையாலே அந்த நபர்கள் இவர்க்குத் தெரிந்திருக்க வேண்டும். அவர்களாவது இவர்க்குத் துணை புரிந்து எழுகட்டுமே. அவர்களும் நேர்நிற்க அஞ்சியே மறைந்திருந்து இவர்க்கு உதவிபுரிகின்றனர் போலும்.

அகாண்டமாக ஸ்வாமியை நிந்திப்பதும் உலகிலுள்ள பெரியார்களையெல்லாம் பழிப்பதும் வேஷாடசர்க்குத்தகாது தகாது தகாதென்று பலமஹான்கள் இவர்க்கு நிச்சலும் ஹிதோபதேசங்கள் செய்துவந்தாலும் அவையெல்லாம் நெருப்புக்கிட்ட நெய்யாஹுதியே போலும்.

... .... ... ....

## 2. ஜகந்மோஹிநீ ப்ரசம்ஸா ரஹஸ்யம்.

17. வேஷாடசர் (பாரா 16ல்) எழுதுகிறார்—"முன்காலங்களில் குழந்தைகளுக்கு அத்தைப்பாட்டிகள் கதை சொல்வதுண்டு. இக்காலத்தில் பாமரர்களுக்கு ஆனந்தமளிக்க காதற் கதைகளும் நாவல்களும் எழுதப்படுகின்றன. இம்மாதிரியான புத்தகங்களில் ப்ரஸித்தமானது 'ஜகன் மோஹினி' என்னும் மாதப்பத்திரிகை. அதற்கு ஆசிரியை

வை. மு. கோதைநாயகி அம்மாள். அந்தப் பத்திரிகையின் பொங்கல் மலரைப்பற்றி ஸ்ரீ. உ. வே. P. B. A. ஸ்வாமி கொடுத்திருக்கும் அபிப்ராயம்......(பாரா 17.) அவ்வபிப்ராயம்......இது. (பாரா 18.) இம்மாதிரி நெஞ்சினால் நினைப்பதற்கும் நாம் நடுங்குவோம்; வாயினால் சொல்லுவதற்கு நாவெழாது, எழுத்தில் எழுதமாட்டோம்.” இத்யாதி.

18. ஸ்வாமி ஜகன் மோஹினியின் பொங்கல் மலரைப்பற்றி அபரிமிதமாகப் புகழ்ந்து எழுதி விட்டாராம்; அது தமக்கு அளவு கடந்த வயிற்றெரிச்சலை விளைவிக்கின்றதாம். [ஷோடசருடைய பத்திரிகைக்கு ஸ்வாமி கொடுத்த அபிப்ராயம் இவ்வளவு விசேஷமாக இல்லையாம்.] இதைப் பற்றி அபரிமிதமாக தூஷிக்கிறார் ஷோடசர். ஒருகாலல்லமேல் அடிக்கடியும் தூஷிக்கிறார். ஆச்சான் பிள்ளை விஷயமான விசாரத்தில் இந்த ப்ரஸங்கத்திற்கு ஏதேனும் ஸம்பந்தாவது ப்ரஸக்தி யுண்டோ? ஒரு பத்ரிகையை தூஷித்தெழுதியிருந்தால் 'உயர்ந்த பத்ரிகையை வீணாக தூஷித்திருக்கிறார் பாருங்கள், இவருடைய இயல்பே இத்தகைத்து' என்று எவ்வளவும் எழுதலாம். பூஷித்திருப்பதை யெடுத்துக் கொண்டு சாமாரியாக தூஷிப்பது பலபல தத்துவங்களை ஷோடசரும் உலகமும் நன்கு தெரிந்து கொள்வதற்காகவே யென்க. பூஷிப்பதென்பது அவரவர்களின் மனத்தின் மகிழ்ச்சியைப் பொறுத்தது; இதில் அவரவர்களுக்குப் பரிபூர்ணாதிகாரமுள்ளது. அதை மறுக்கப் பொறுமையாளர்கள் தவிர மற்றையோர்க்கு உரிமையில்லை.

19. “ஷோடசாத்யாயியானது ஸகலச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களிற் காட்டிலும் ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளிற் காட்டிலும் மிகச் சிறந்து விளங்குகின்றது” என்று ஒருவர் எழுதிவிட்டால் அதனை இவர்பரமஸந்தோஷத்தோடு இன்னமும் திருமணமும் சேர்த்துக் கொண்டு பெரிய எழுத்தில் பதிப்பித்து வெளியிட்டுக்கொள்ள ஸஜ்ஜராயிருக்கிறார். அப்படி வீணான புகழுரைகளை இவர்வெளியிட்டுக் கொண்டு மிருக்கிறாரென்பதை உலகமறியும்.

20. உண்மையில் கொண்டாடவேண்டிய பத்ரிகையாயிருந்தால் அவசியம் கொண்டாடலாமென்றும், கொண்டாடத்தகாத பத்ரிகையை ஸ்வாமி கொண்டாடினபடியினாலேயே தாம் கடுமையாக தூஷிப்பதாகவும் சொல்லுவர் ஷோடசர். இங்கு விரிவுக்கு அஞ்சாது விளம்புகின்றேன் ;

21. ஜகன்மோகினி பத்திரிகையானது இருபத்தைந்து வருஷகாலமாக நமது நாட்டிலும் இதரநாடுகளிலும் மிகுந்த ப்ரக்யாதிபெற்ற ஓர் உத்தமபத்திரிகை. உலகில் சிலபத்ரிகைகள் வைதிகவிஷயங்களை மாத்திரம் விளக்குவதில் நோக்குடையன. சிலபத்ரிகைகள் கேவலம் லௌகிகவிஷயங்களைமாத்திரம் விளக்குவதில் நோக்குடையன. மோகினி அப்படியல்லாமல் உபயவிஷயங்களையும் வெகு அற்புதமாக விளக்கி இதுகாரணமாகவே இவ்வுலகில் வைதிகர் லௌகிகர் என்கிற வாசியற அனைவராலும் ஆச்சர்யமாக மெச்சப்படும் பத்திரிகையாக விளங்குகின்றது. இப்பத்திரிகை லௌகிகவிஷயங்களை இடக்கண்ணாகவும் வைதிக விஷயங்களை வலக்கண்ணாகவுங் கொண்டிருக்கின்றதென்கிற உண்மையையுணர்ந்தே வைதிகசிகாமணிகளும் விசேஷமாக இப்பத்ரிகையில் பேரன்பு பூண்டிருக்கின்றார்கள். ப்ரஹ்மஸ்ரீ ரிடைர்ட்ஜட்ஜ். கே. ராமஸ்வாமிசாஸ்த்ரிகள் போன்ற மஹாமதிகள் லௌகிகத்தைவிட வைதிகத்தில் அளவுகடந்த ஊற்றமும் ஊக்கமுமுள்ளவர்கள், மோஹினியில் எவ்வளவு ப்ராவண்யங் கொண்டிருக்கின்றார்களென்பதை நாடுநகரமும் நன்கறியும்.

22. அத்தைப்பாட்டிகள்கதை' என்று ஷோடசர் இழிவாகக் கூறுவது அவருடைய பத்திரிகைக்கே ஏற்கும். ஏனெனில்; இவர், பாரா 5ல் “எம்பெருமானார் கூரத்தாழ்வானைக் கோபத்தினால் உதைத்தமாதிரி” என்று, ஸாத்விக ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் காதுகொண்டு கேட்கத்தகாதவொரு கதையை எழுதியிருக்கிறார். அத்தைப்பாட்டிகதைகளிலும் கழிவடையாகக் கழிக்கப்பட்டகதை இது. “துவரியாடையர் மட்டையர்” என்று திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றாருடைய வகுப்பிற் சேர்ந்த சிலர் ஒரு காலத்தில் கட்டின இக்கதை அச்சுக்கூடங்கள் ஏற்பட்டபின் சில பெரியார்நூற்களிலும் ஏறிப்புகுந்த

வளவால் உண்மைக்கதையாக மாட்டாது. ஆழ்வானைக் காளஞைதைந்து நாகம்புக நினைப்ப வல்லர் எம்பெருமானர்; அவர்க்கு அத்தனை ரோஷத்தையுண்டாக்கும் நெஞ்சுரமுடைய ரல்லர் ஆழ்வான். அநியாயமான இப்படிப்பட்ட அத்தைபாட்டிகதைகளையும் அஸம்பத்த சித்தனைகளையும் தாங்கிக்கொண்டு தவிக்கும் ஷோடசர்பத்ரிகை போன்றதன்று மோகினி.

23. தவிரவும், "நான் 300 கேட்டேன், 70, 80 தான் கொடுப்பேனென்ருர்; 37-14-58ல் நான் காஞ்சீபுரம் போனேன், 43-17-68ல் அவர் திருச்சிக்குவந்தார், நான் இது சொன்னேன், அவர் அது கேட்டார், அது புளுகு. இது பொய்யே" என்றிப்படிப்பட்ட தலைவேதனைக் கதைகளைத் திருப்பித்திருப்பியெழுதிக் கொண்டு வயிற்றிற்பிறந்த புத்திரர்களுக்கும் ஜுகுப்ஸையைவிளைக்கின்ற ஷோடசர் தமது பத்ரிகையைப்பற்றி மஹான்கள் என்ன நினைத்திருக்கிருர்களென்பதைச் சிறிதும் அறியகில்லாமல் உலகமுழுதும் புகழுமோகினி பத்திரிகையைப் பழித்துரைப்பது இன்னமும் அதன்பெருமையும் புகழும்ஓங்குதற்கே வித்தாகுமென்றுணர்க.

24. "வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்" என்று அருளிச்செய்த ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திக்கடலிலும் இறங்கி ஆராய்வோம். எம்பெருமான்களையேயன்றோ பாடவேண்டியவர்கள் இவ்வாழ்வார்கள் *பார்மன்னு தொல்புகழ்ப்பல்லவர்கோன்* என்றுஒரு அரசனைப்பற்றிக்கொண்டும், * செம்பியன் கோச்செங்கணன் * தெய்வவாள்வலங்கொண்ட சோழன் என்பவனைப்பற்றிக்கொண்டும் பதிகம் பதிகமாகப்பாடியுள்ளார் திருமங்கையாழ்வார். பாதிபாசுரம் பெருமானுக்கு, பாதிபாசுரம் அரசனுக்கு என்று பங்கிட்டுக் கொடுத்துப் பாடியுள்ளார். 'அவ்வரசர்கள் திவ்யதேசத்திருப்பணி செய்தார்கள், அதனால் அவர்கள் மிகமிகக் கொண்டாடிப்பாடப்பட்டார்கள்' என்கிற பதில் நாமுமறிவோம். இக்காலத்தில் உலகம் நிறைந்த புகழாளரான கல்கத்தா மகனீராமசேட் என்னும் தார்மிகமஹாப்ரபு பலபல லக்ஷங்கள் செலவுசெய்து ஸ்ரீஹஸ்திகிரி, திருவெவ்வுளூர், மதுராந்தகம் முதலான தலங்களில் வாசாமகோசரமான திருப்பணிகள் நிகழ்த்தியிருக்கிறரென்பது ப்ரத்யக்ஷம். இதற்காக இவரை நாம் புகழ்ந்து பாடினேமென்றால் இந்த ஷோடசர் அப்போதும் நிந்திக்கப்போகிற வரேயன்றோ.

25. திருக்கோட்டியூரிலுள்ளாரைத் துதிக்கின்ற திருமங்கையாழ்வார் "மேவு நான்முகனில் விளங்கு புரிநூலர்" என்று, உந்தியில் தோன்றின நான்முகனிற் காட்டிலும் மேம்பட்டவர்களென்று புகழ்கிறார். நம்மாழ்வார் "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்கிருர். * ஒரு நாயகமாயோடவுலகுடனாண்டவர் கருநாய் கவர்ந்தகாலர்" என்று சற்றுமுன்னே இகழப்பட்ட அரசர்களுக்கு இப்போது என்ன வைபவம் வந்திட்டது! திருவுடை மன்னரைக் கண்டு திருமாலைக் கண்டதாக ஆழ்வார் எதுக்குக் களிக்கவேண்டும்? * கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பாக * என்கிற ஆழ்வார்க்கு மன்னருடைய செல்வத்தில் என்ன மயக்கம்? ஜமீன் ஜாகிர் கிடைக்குமென்று மன்னவர்களைப் புகழ்கிறாரழ்வார்.?

26. * சொன்னால் விரோத மென்கிற பதிகத்தில் 2-ம் பாட்டின் ஈட்டிலே ஒரு கதையருளிச் செய்கிருர்; ஒரு ப்ரபு திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியான மெழுதி நஞ்சீயரிடம் கொண்டுவந்து இதைச் செவிசாத்தி ஸம்பாவிக்க வேணுமென்றானும். அவர் நம்பிள்ளைக்கு நியமித்து இதைக் கேட்டுகந்து ஸம்பாவியும் என்றாராம். அவரும் ஆச்சரியமாக ஸம்பாவித்தாராம். இக்கதையை யெழுதுமிடத்தில் இடையிலுள்ள ஒரு வாசகம் உற்று நோக்கத் தக்கது. (அதாவது) நஞ்சீயர் அந்த ப்ரபுவினிடத்தில் சில உபஜீவனங்களை யெண்ணினதாக ஸ்பஷ்டமா யெழுதப்பட்டிருக்கின்றது. உத்தமாச்ரமியாய் விரக்தாக்ரேஸரான ஜீயர் அந்த ப்ரபுவினிடத்திலே சில உபஜீவனங்களை யெண்ணுவதும் அதற்காக அவனை ஸம்பாவிக்க நம்பிள்ளைக்கு நியமிப்பதும் என்னனே பொருந்துமென்று கேட்டால் வாயைத்திறப்பரோ ஷோடசர்.

27. மோகினியின் பொங்கல் மலரில் எத்தனைவைதிகர்களின் எத்தனையற்புதமான கட்டுரைகள்! பகவத்பாகவத பக்தியை வளர்க்கும் எத்தனை விந்யாஸங்கள்! எத்தனை பேரவியங்கள்! அவற்றைக் கண்டுகளித்து அநுபவிக்கப்பெருத தௌர்ப்பாக்யமோ! கண்டுவைத்தும் ஸஹிக்கமாட்டாத பொருமையின் கனமோ! வேஷாடசரை இப்பாடு படுத்துகின்றது எதுவோ அறியோம்.

28. இவ்விஷயம் எத்தகைத்தாறைலும் ப்ராக்ருதவிவாதத்தில் வேஷாடசர் மிகவும் அப்ரஸக்தமாக இதனை ப்ரஸங்கித்துப் பங்கமடைகிருரேயென்று பரிதாபமாயிருக்கின்றது.

## 3. தேசிகதூஷணோத்கோஷண ரஹஸ்யம்.

29. வேஷாடசர் (பாரா 21ல்) "வேதாந்தாசார்யரான தேசிகர் விஷயத்தில் P. B. A. ஸ்வாமி செய்திருக்கும் தூஷணங்கள் வாசா மகோசரம், எண்ணிமுடியாது. ஏட்டில் அடங்காது" என்றெழுதுகிருர். இதன் தத்திவம் எவ்வளவென்பதைப் பிறகு விசாரித்துக்கொள்வோம். இவர் எழுதியிருக்கிறபடி வாசாமகோசர தேசிக தூஷணங்களை ஸ்வாமி யெழுதியிருக்கிருரென்பதை ஸத்யமென்றே வைத்துக்கொள்வோம். ப்ராக்ருத விசாரத்தில் அதைப்பற்றின உத்கோஷணம் எதற்காக? அதனல் இவர்க்கென்ன நஷ்டம்? இதுவும் ஜகன்மோஹினீ விஷயமான சர்ச்சைபோலே மிகவும் அநாவச்யகமானது. ஒருவர் தம் மாதாவையும் பிதாவையும் இச்சலும் வையப்புடைக்கிருரென்று வைத்துக்கொள்வோம். இவரே அது செய்கிருரென்றும் வைத்துக்கொள்வோம். அதை யெடுத்தெழுதுவதுதான் விவேகிகளுக்குக் கார்யமோ? வேஷாடசம் ஏகாஹம் ஸபிண்டம் என்று பெயரிட்டுப் பூர்ணம் செயவதற்கு இதுதான் விஷயமோ? இப்படி யெழுதிவிட்டால் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களும் தமக்குப் பரிந்துவருவார்களென்றும், அவர்களையுங் கூட்டிக்கொண்டு ஸ்வாமியை ஜஞ்ஜாமாருதமாக தூஷிக்கலாமென்றும் இவருடைய ஆசாமோதகம். ஸ்வாமியையும் ஸ்வாமியினுடைய க்ரந்தங்களையும் உச்சிமேல் வைத்து விசேஷமாக மெச்சுகின்றவர்கள் தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களே யாவர். வைதிகத்திலும் லௌகிகத்திலும் உத்துங்கஸ்தானத்திலே நிற்கின்ற தேசிகஸம்ப்ரதாயஸ்தர்கள் யாவரும் ஸ்வாமியை ப்ரத்யக்ஷஹயக்ரீவரென்று புகழ்ந்து ச்லோகங்களாகவும் செய்யுள்களாகவும் வசனங்களாகவும் வெளியிட்டிருப்பவை வாசாமகோசரம், எண்ணிமுடியாது, ஏட்டில் அடங்காது. இது நாம் பொய்யாக எழுதுகிறதா, அதிசயோக்தியாக எழுதுகிறதா, யதார்த்தமாக எழுதுகிறதா என்பதை அவச்யம் நிரூபித்தே விடவேண்டும். மற்ற விஷயங்களை யெல்லாம் தள்ளி இந்தவொரு விஷயத்திலேயே க்ரந்த ப்ரபஞ்சகம் வைத்துக் கொள்வோம்

30. இப்போது தேசிகருடைய ஆஸ்தானத்தை யலங்கரித்து ஸர்வ ப்ரகாரத்தாலும் தேசிக ஸித்தாந்தத்தை வளர்ப்பவரான ஸ்ரீமத் பரமஹம்ஸ மைஸூர் பரகால மடாதிபதி ஸ்வாமியிடத்தில், சில பொருமையாளர்கள் சென்று ஏதேதோ கலஹங்கள் பண்ணிப் பார்த்தும் "அண்ணங்கராசாரியரை நான் அபரதேசிகனுக மதித்திருக்கிறேன், வாய்திறவாதே வந்தவழியே போங்கள்" என்கிறபதிலையே பெற்றுவந்தார்களென்பதை அவர்களே அவசமாகச் சொல்லித் திரிகிருர்கள். இதில் ஸந்தேஹமிருந்தால் இந்த நமது புத்தகத்தை அந்த மடாதிபதி ஸ்வாமிகளுக்கே அனுப்பியோ நேரில் சென்று காண்பித்தோ உண்மையுணர்ந்து கொள்ளலாம். இவ்விபூதியில் பாங்காக எழுந்தருளியிருப்பவர்களையே நாம் தெரிவிப்பது. மைஸூர்வரை போகவேண்டா; இவருடைய பக்கத்திலேயே யெழுந்தருளியிருக்கிற தேசிக தர்சக மஹா ப்ரதீபமான ஸ்ரீ. உ. வே. (திருச்சி) ஏ. வி. கோபாலாசார்யர் ஸ்வாமியிடம் சென்று "காஞ்சி ஸ்வாமி விஷயமாக தேவரீர் எழுதியிருக்கும் ச்லோகங்கள் எத்தனை? மதிப்புரைகள் எத்தனை?" என்று கேட்கலாமே. அவரிடம் சென்று கேட்கத்தான் வேணுமோ? காஞ்சீ ஸ்வாமியின் ஸகல க்ரந்தங்களையும் அல்லும் பகலும் இடைவிடாது ஸேவித்து வருகின்ற இவர்க்குத் தெரியாததோ? க்ரந்தமாலையாபீஸுக்கு நேரிற் சென்று ஸ்வாமியினுடைய ஸகல வெளியீடுகளையும் மூட்டைகட்டிக் கொணர்ந்து முச்சந்தியும் பாரா

யணம் செய்துவருகிறாரே புத்தூர்ப் பெரியார்; தேசிகதர்சந தூரந்தரர்களான எத்தனை மடாதிபதிகள் எத்தனை வித்வான்கள் எத்தனை மஹாமஹோபாத்யாயர்கள் எத்தனை ஜட்ஜ்கள் எத்தனை அட்வொகேட்டுகள் எத்தனை யமுதமொழிகளைப் பரவசமாகப் பரவவிட்டிருக்கிறார்களென்பதை இவருள்ள மறியாமலா இருக்கிறது?

31. இப்படி நாமெடுத்தெடுத்துக் காட்டுவதைக்கண்டு அஸூயாக்நிதந்தஹ்யமாந ஹ்ருதயராய் மேன்மேலும் தூஷணைகளைத் தலைகால் தெரியாமல் வாரியிறைக்கப் போகிறாரென்பதையும் நாமறிவோம். எவ்வளவும் வாரியிறைக்கட்டும். அத்தனையும் ஸ்ரீஸ்வாமியின் வைபவாதிசயங்கள் விசேஷித்து வெளிவருவதற்கே விஸ்தாருமென்பதை நாம் சொல்லவேணுமோ? நாள்களோர் நாலைந்திலேயே நன்கு பார்க்கப் போகிறீர்கள். அதுநிற்க. ஸ்ரீஸ்வாமிசெய்யும் வாசாமகோசரதேசிக தூஷணங்களினால் இவர்க்கு விளைந்த நஷ்டமென்ன? என்பதுதான் முக்கியமான கேள்வி. ஸ்ரீவைஷ்ணவஸமயாசார நிஷ்கர்ஷமென்கிறவொருக்ரந்தத்தை இவர் அடிக்கடி ப்ரஸ்தாவிக்கிறாரே; அது ஒரு பெருஞ்சுமையான புத்தகமென்பதை உலகமறியும். அதில் முக்கால்பாகம் தேசிகதூஷணமேயென்பதையும் உலகமுணரும். அது ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபக ஸபையாரால் அச்சிட ஆரம்பிக்கப் பட்டபோது தேசிகபக்த ஸமூஹத்தவர்கள் திரண்டு ஹாஹாகாரஞ் செய்ததையும் விபீஷிகைகள் காட்டியவையும் ஒருவர்க்கும் மறந்திராது. அப்படிப்பட்ட புத்தகத்தை இவர் என்ன செய்கிறாரென்று கேளுங்கள். 600 வருஷங்களுக்கு முன்பிருந்த வொருமஹாசார்யரை [தேசிகரை] தூஷிப்பதென்றால், இக்காலத்தவர்கள் நாயே பேயே கழுதே விதவேயென்று பரஸ்பரம் தூஷித்துக் கொள்ளுகிறார்களே. இவ்விதமாக தூஷிப்பதென்பது அஸம்பாவிதம். இந்தவேஷாடசரே பாரா 22ல் ஸ்ரீபாஷ்யகாரர் சங்கராசார்யரை சரமாரியாக தூஷித்திருக்கிறாரென்று ஸ்ரீபாஷ்யபங்க்திகளை விரிவாக எடுத்து உரைசெய்து (பக்கம் 15ல்) காட்டியிருக்கிறாரே, இந்தரீதியில் தூஷிப்பதுதானே ஸம்பாவிதமாகும். ஸ்ரீபாஷ்யகாரர் காட்டியருளின வழியை ஸ்வாமி பின்பற்றினாரென்று முடிந்தது.

32. இதைச்சிறிது விரிவாகவே உலக்கு உணர்த்துவோம் தேசிகரும் ஆச்சான் பிள்ளையும் ஸமகாலத்திலிருந்தவர்கள். இவருடைய க்ரந்தங்களை அவர்வாங்கிப்பார்த்துக் கண்டிப்பதும் அவருடைய க்ரந்தங்களை இவர்வாங்கிப் பார்த்துக் கண்டிப்பது மாயிருந்தது மறைக்க முடியாத விஷயம். "இவனுமவனுங் கூடி உபாயமென்னில் சரணங்களிரண்டென்ன வொண்ணாதாலென்ன வேணும்" என்று ஆச்சான் பிள்ளை யெழுதியிருந்ததைக் கண்டதேசிகர் ரஹஸ்யத்ரயஸாரத்தில் "இதி மந்தைரிதம் ப்ரோக்தம்—க்ரந்தஜ்ஞை ரபஹாஸ்யம் தத்" [மூடர்கள் பேசினது, வித்வான்கள் சிரிக்கக் கூடியது] என்று தூஷித்தார். அதன்மேல் நம்ஸ்வாமி "ஆச்சான் பிள்ளை மந்தரல்லர்; அவருடைய ஸ்ரீஸூக்தி க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யமன்று" என்பதையும், உபதேசரத்னமாலையில் * முன்னோர் மொழிந்த பாசுரத்தில் மூர்க்கராவார் என்னப்பட்டவர்களே மூர்க்கராவாரென்பதையும் வித்வஜ்ஜந ஹ்ருதயஹாரியாக ஸூசித்துப் பலக்ரந்தங்களையெழுதி வெளியிட்டார். காஞ்சீபுரத்தை யலங்கரித்தருளா நின்ற கோழியாலம் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான வித்வத்வரிஷ்ட யதிவரர் தம்முடைய பரிவாரங்களோடுங் கூடமேற் சொன்ன ஸ்வாமிக்ரந்தங்களை யெதிர்த்தெழுதி * சசால சாபஞ்ச முமோச * என்னும்படி கையொழிந்து நின்றாரென்பது ஜயத்வஜபட்டிகாரூடம். பத்தெட்டு வருஷங்களுக்கு முன்பு மூன்றுவருஷகாலம் இந்த க்ரந்தப்போர் விசேஷமாக நடந்திருக்கிறது. * யதாசக்தி நிக்ருஹ்ணீயாத் * என்ற சாஸ்த்ரக் கட்டளையிலே ஸ்வாமி செய்தருளுகிற கைங்கர்யத்தில் இதரர்கள் பொறுமைப்பட வேண்டியது ப்ராப்தம். கோயில்தென்னாசார்யதர்சகஸபைக்கு நான் தலைவனென்று அநாவச்யகமாகப் பத்ரிகைதோறும் பிரசுரித்துக் கொள்ளுகிற இவரா பொறுமைப்படுவது. அந்த விருதுக்கும் இவர்க்கும் என்ன ஸம்பந்தமென்பதைத் தென்னாசார்ய தர்சநத்தில் மெய்யன்புடையார் விமர்சித்தேதீருவர்கள்.

33. 'ஸ்ரீதேசிகர் ஸ்வாமிக்குப் பரமாசார்யராச்சே, அவருடைய உக்திகளையா தூஷிப்பது' என்கிறார் வேஷாடசர் இதற்குநாம் ஒன்றே கேட்கிறோம், வசவுகளைவிட்டு பதில் சொல்

லட்டும். வாதிகேஸரிஜீயர் ஆச்சான் பிள்ளை சிஷ்யரேயொழியப் பெரியவாச்சான் பிள்ளை சிஷ்யரல்லர் என்பர் பெரியோர்; இந்தஷோடசர் (பாரா 83ல்) "பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளையைப் பற்றி அவருடைய சிஷ்யரான வாதிகேஸரி ஜீயர் அருளிய" என்கிறார். அப்படியே வைத்துக்கொள்வோம். அந்தவாதிகேஸரிஜீயர் ஸ்வாசார்யரான பெரியவாச்சான் பிள்ளையை தம்முடைய திருவிருத்தவுரையிலும் திருவாய்மொழிப் பன்னீராயிரவுரையிலும் எவ்வளவு தூஷித்திருக்கிறரென்பது இவர்க்குத் தெரியுமோ? அவாருளிச்செய்த அர்த்தங்களைக் கண்டிப்பதிற்காட்டிலும் வேறு தூஷண முண்டோ? அந்த கண்டனங்களை மறைக்க இவரால் முடியுமோ? அவற்றை யெல்லாம் நம் ஸ்வாமி தமது வ்யாக்யானங்களிலே ஆங்காங்கெடுத்தக்காட்டி, உபதேசரத்தினமாலையிலே "அன்போடழகிய மணவாளச்சீயர்—தம்பேசியபோத முடன்" என்றருளிச் செய்ததற்கு இது மிகச்சேருமென்று முடித்திருக்கிறார். வாதிகேஸரிஜீயருடைய ஜ்ஞானம் ஆசார்யாதீனமன்று, ஸ்வதந்த்ரம் என்பதன்றோ தம்பேரியபோத மென்றதன் ஆழ்பொருள். அப்படி அவர் ஸாக்ஷாத் ஸ்வாசார்யரை தூஷித்தது ஷோடசர்க்குப் பரமபோக்யமாயிருக்கட்டுமே. 'சுட்டி சுட்டது, கைவிட்டது' என்று கைவிட்டுவந்தவராக ஸ்ரீவைஷ்ணவஸமயா சார நிஷ்கர்ஷகாரால் நிரூபிக்கப்பட்ட ப்ரதிவாதிபயங்கராசார்யருடைய திருவம்சத்தில் தோன்றியவர் செய்தருளும் கண்டனம் மரீஷிமாந்யமேயாகும். வாதிகேஸரி ஜீயருடைய கண்டனம் இப்படிபோற்றத் தக்கதன்று. அந்த ஜீயருடைய க்ரந்தங்கள் முழுவதையும் இரண்டு மூன்று நாட்களில் வாசித்து முடிக்கலாம். ப்ரஸக்திவந்து விட்டபடியாலே ஒவ்வொருவரும் வாசித்தப்பார்க்கலாமே. நம் ஸ்வாமி நெடுநாள் முன்னமே ஆராய்ந்து வெளியிட்டிருப்பவைகளுள் ஒன்றை இங் கெடுத்துக்காட்டுகிறேன். திருவிருத்தத்தில்* கடல்கொண்டெழுந்தது வானமென்கிற பாசுரம் கால மயக்குத் துறை யென்று நம்பிள்ளையும் பெரிய வாச்சான் பிள்ளையு முரைத்தருளினார்கள்; வாதி கேஸரி ஜீயர் "கடல் கொண்டெழுந்த வக்காலங்கொலோ புயற் காலங்கொலோ வென்கையாலே இது காலமயக்கு தமன்று" என்று வெட்டொன்று துண்டிரண்டாகக் கண்டித்தார். பெரிய (அல்லது சிறிய) ஆச்சான் பிள்ளை திருவடிகளிலே திருவிலச்சினை பெற்று க்ரந்த காலக்ஷேபமுஞ் செய்து ஸத்தை பெற்ற விந்த ஜீயர் பரமாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளைக் கண்டிக்கவா க்ரந்த மெழுதக் கைவைத்தது? "கண்டிக்கவேயில்லை, கொண்டாடித் தானிருக்கிறார்" என்று ஷோடசர் ஒரு சுவடி யெழுதட்டுமே பார்ப்போம். இதுவன்றோ உலகுக்கு அவசியமான பணி. "பெரிய வாச்சான் பிள்ளையும் வாதி கேஸரியும்" என்று மகுட மிட்டு இருவர்க்கு முள்ள ஐககண்ட்யத்தை அழகாக நிரூபிக்கட்டும். ஜீயர் செய்த தத்வதீப தீப ப்ரகாசங்களையும் எடுத்துக் கொண்டு பரந்த ரஹஸ்யத்திலே அந்த ஜீயர்க்குள்ள ப்ரதிபத்தி விசேஷங்களையும் பரவச்செய்க.

34. வாதிகேஸரி ஜீயருடைய ஆசார்யா பசாரங்களை மணவாளமாமுனிகள் நன்கறிந்து வைத்தும் ஒருவர் பக்கலிலும் குறை கூறவறியாத பரமஸாத்விக ராகையாலே 'தாமரையைக் கொள்வோம், சேற்றை விட்டிடுவோம்' என்று கொள்வாரில் தலைவராகையாலே அவரிடத்தில் குறை கூறாது "தம் பேரிய போதமுடன்" என்கிற அதிசதுர பரம கம்பீரோக்தியினால் மாத்திரம் அவருடைய நிலைமையை ரஸிகர்களுக்கு நுட்பமாகக் காட்டியருளி உபயுக்தாம்சங்களை அவருடைய வாக்கிலிருந்தும் உபஜீவித்தருளினார். ஆனாலும் அந்த வாதிகேஸரி ஜீயருடைய அபசாரம் அறிவருக்கத் தக்கதே. அவருடைய ஸ்வதந்த்ரோக்திகளை நம் ஸ்வாமி தமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில் ஆங்காங்கு எடுத்துக் காட்டி அவற்றின் தகுதியின்மையையும் பெரிய வாச்சான் பிள்ளை போல்வாருளிய பொருளே பொருத்தமான தென்பதையும் உபபத்திகளுடன் உரைத் தருளியிருக்கின்றார். நினைவுக்கு வருவதோரிடமே இங்குக் காட்டுகிறேன்; * கேசவன் தமரில் * விட்டிலங்கு செஞ்சோதி தீபிகை காண்க. வாதி கேஸரி ஜீயர் கண்டனமாக வெழுதின தெல்லாம் அஸ்தாகே; நம் ஸ்வாமி கண்டனமாக எழுதின வையத்தனையும் ஸ்தாநே யென்பதும் அசைக்கமுடியாதவை யென்பதும் பரீக்ஷித வித்வஜ்ஜன ப்ரதிஷ்டாபிதமான விஷயம். இதில் இன்னமும் விரிவாக எழுதவேண்டியவைகளை அடுத்த

நூலில் எழுதுவோம். ஸ்ரீஸ்வாமி ராமாநுஜர் தொடங்கி மணவாள மாமுனிகள் வரையிலுமுள்ள ஸகலாசார்யர்களையும் தூஷித்தவரென்று கூறுகின்ற ஷோடசர் முக்கியமான வாதிகேஸரி தூஷகத்வத்தை விட்டிட்டாரந்தோ! இனி இதையும் சேர்த்துக் கொண்டு பறை சாற்றுக.

## 4. வித்வத் பக்ஷபாத விலபந ரஹஸ்யம்.

35. * யாத்ரிக்யாய ப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம், அபந்தாநம்—து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி * என்று முராரி மஹாகவி சொன்ன கணக்கிலே ஸ்வாமியின் அஷ்டாத்யாயியை அபிநந்தித்து, மற்றும் அவருடைய க்ரந்தங்களையெல்லாம் கொண்டாடி எழுதினவர்கள் ஒருவரிருவரல்லர்; உலகம் முழுவதுமே யெழுதியாயிற்றென்பது அஷ்டாத்யாயி யணிகலன் என்னும் புத்தகத்தினால் விசதமாயிற்று. அதைக் கண்ட ஷோடசர் (பாரா 81ல்) "உண்மையைப் பார்க்காமல் அபிப்ராயம் தெரிவித்திருக்கி[illegible]ர்கள்; P. B. A. ஸ்வாமியின் பேரில் பக்ஷபாதம் கொண்டவர்களாயிருக்கிறார்கள்; [illegible] B. A. ஸ்வாமி எழுதுவதை யெல்லாம் வேத வாக்காகக் கொள்பவர்களாயிருக்கிறார்க[illegible] இவர்கள் பக்ஷபாதமில்லாதவர்களாயிருந்தால் என் க்ரந்தத்தைப் படித்து விட்டு எனக்குத் தங்க ளபிப்ராயத்தை தெரிவிக்க வேண்டும்" என்று எழுதுகிறார். விவேகிகளே! இந்த வேடிக்கையைப் பாருங்கள். ஸ்வாமி யெழுதுவதை யெல்லாம் வேதவாக்காகக் கொள்ளுகிறார்களே யென்று ஷோடசர் யாவதாயுஷமும் பரிதபித்துக் கொண்டிருக்கலாமே யொழிய வேறு பரிஹார முண்டோ? அப்படி வேதவாக்காகக் கொள்பவர்கள் ஸாமான்யமானவர்களா? வழிப் போக்கர்களா? என்று பாருங்கள். ஸ்ரீமத் திருப்பதி ஜீயர் ஸ்வாமி, மதுரை ராவ் பஹதூர் ஸ்வாமி, மதுரைத் தமிழ்ச்சங்க வித்வான்கள், வானமாமலை மடம் ஆஸ்தான வித்வான்கள், ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான்கள்............ ஆகிய இவர்கள் ஆயிரம் பதினாயிரம் கொடுத்தாலும் அநீதியான அபிப்ராயத்தை வழிட்டுக் கொண்டு அபிநந்தனம் செய்யக் கூடியவர்களோ? உ. வே. திருக்கோட்டியூர் தங்கமையங்கார் ஸ்வாமி, பம்பாய் வி. வி. ஐயங்கார் ஸ்வாமி, தென் திருப்பேரை ராமசந்திராசார்யர் ஸ்வாமி போல்வார் ஷோடசர்க்கு அந்தரங்க ஆப்த கோடியிலும் சேர்ந்தவர்க[illegible]ன்பது ப்ரஸித்தம். அவர்களை யெல்லாம் இவர் இப்போது பழிக்க ஆரம்பித்தி[illegible]கிறார். உண்மையைப் பாராமல் பக்ஷபாதங்கொண்டு வேதவாக்காகக் கொண்டாடி விடுகிற[illegible]ளென்கிறார். அவர்கள் கண்ணில்லாதவர்களல்லர், படிப்பில்லாதவர்களல்லர், பார்வையி[illegible]ாதவர்களல்லர்; ஒவ்வொருவரும் மஹாவிவேகிகள் மஹா பண்டிதர்கள் மஹாமேதாவிகள். அவர்களுடைய ஆனந்தபரீவாஹமான அபிநந்தன பத்ரிகைகள் தம்முடைய துர்வாதத்திற்கு இணங்கவில்லையே யென்று அவர்களைப் பழித்து விடுவதோ? இன்னமுமுள்ள வித்வான்கள் அஹமஹமிகயா அபிநந்திக்க வருகிறார்களே; அப்போது உலகம் முழுவதையும் பழித்து எழுதிப் போதுபோக்க வேண்டியது தவிர வேறுண்டோ விவர்க்குக் கதி?

36. "P. B. A. ஸ்வாமியிடத்தில் பக்ஷபாதத்தினால்" என்கிறார், பக்ஷபாதமென்றுலென்ன? அன்புதானேயது. ஸுதர்சந சதகத்தில் "அக்ஷம் பக்ஷே பதித்வா பரிகடயது வ:" என்று பக்ஷபாதமும் ஒரு புருஷார்த்தமாகக் கூறப்பட்டுள்ளது. அது கர்ஹணீயமன்று. பக்ஷபாதஹேது தம்மிடத்திலுண்டாகவில்லையே யென்று விதிரேவ விசேஷ கர்ஹணீய:. தவிரவும், ஷோடசர் (பாரா 77ல்) அஷ்டாத்யாயியணிகலன் என்று ஒரு தூஷணச்சுவடி தமக்குவந்ததாகவும், அதில் தம்மைப்பற்றியும், தமது பத்திரிகையைப்பற்றியும் பலபல தூஷணங்கள் செய்யப்பட்டிருப்பதாகவும் ப்ரரோதநம் காட்டுகிறார். அந்த அணிகலன் முழுவதும் இந்த ஷோடசர் தாமும் சிரமேற்கொண்டு பூஜிக்கத்தக்க பெரியார்களின் ஸ்ரீமுகங்கள் கொண்டது. அப்பெரியார்களையே இவர் தூஷகர்களாக முறையிடுகிறார். எந்த பெரியார் எந்த வார்த்தையை தூஷணையாக எழுதியிருக்கிறாரென்று கேட்டால் ஒன்றெடுத்துக் காட்டமுடியுமா இவரால். அத்தனை மஹான்களுஞ் சேர்ந்து ஸ்வாமியின் ஸூக்திகளைக் கொண்டாடி விட்டார்களே யென்கிற வயிற்றெரிச்சலொன்றுதானே இவரை யிப்படி யெழுதுவித்தது.

37. வேஷாடசர் தாம் புருஷஸூக்தத்திற்கு உரையெழுதுவதாகக் கைவைத்து அபத்த களிஞ்சமாக எழுதிவந்தார். உண்மையில் அந்த ஸூக்தத்திற்கும் இவர்க்கும் நையாயிகர்கள் சொல்லுகிற காலிகஸம்பந்தம் கூட கிடையாதென்பதை வித்வான்கள் நன்கறிவார்கள். நேரில் கேட்டால் ஒரு பதத்திற்கோ ஒரு அக்ஷரத்திற்கோ பொருள் சொல்ல வல்லவரோ இவர்? அது கிடக்கட்டும். ஸர்வதந்த்ரஸ்வதந்திர ராகவேயிருக்கட்டும். தப்பும் தவறுமாக இவர் எழுதினவற்றில் ஒரு பிழையை மாத்திரம் அஷ்டாத்யாயி யணிகலனில் (பக்கம் 32ல்) ஸ்ரீவில்லிபுத்தூர் விஞ்சிமூர் ஸ்வாமி யொருவர் பரம கருணையோடு எடுத்துக் காட்டி "வைதிகர்களுடைய பாஷ்யங்களை அவ்னியாமல், சூளைகப்பராய முதலி யென்ற வொருவர் வெளியிட்ட புருஷ ஸூக்தத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டு இப்படி அபத்தமாக எழுதுகிறாரே" என்று முறையிட்டிருந்தார். அதை கண்ட வேஷாடசர் நேற்று வைகாசி மாதத்துத் தமது ஸஞ்சிகையின் அட்டையில் பிழைதிருத்தம் என மகுட மிட்டு தம்முடைய தப்புப் பாடத்தைத் திருத்திக் கொள்ளும்படி பிரார்த்திப்பதாக வெளியிட்டிருக்கிறார். உண்மையில் இவர் பிராமாணிகராயிருந்தால் இப்படியா எழுதுவது? அஷ்டாத்யாயி யணிகலனில் ஸ்ரீவில்லிபுத்தூர் விஞ்சிமூர் ஸ்வாமி பரமக்ருபையோடு தெரிவித்தருளின......................திருத்தத்தை அடியேன் சிரஸா வஹித்தேன்; அதை யாவரும் ஆமோதித்து அவ்விதமாகவே பாடங் கொள்ளும்படி பிரார்த்திக்கிறேன்" என்றல்லவோ இவர் பெருநன்றி பாராட்டி யெழுதியிருக்கவேண்டும். அப்படிப்பட்ட ப்ராமாணிகத்வம் இவர்க்கு உண்டானால், இவருடைய பத்ரிகை மாதம 16 பக்கமானால் குறைந்த பக்ஷம் 32 பக்கமாவது பிழை திருத்தம் மாதந் தோறுமிவர் வெளியிட்டுக் கொண்டேயிருக்க வேணுமென்பதில் யோக்யரான வொருவரும் ஸந்தேஹப்பட மாட்டார். அவ்விஷயம் தனியிருக்கட்டும். வேஷாடசர் தமக்கு ஹிதத்தையே தெரிவித்தருளின ஸ்ரீமத் திருப்பதி ஜீயர் ஸ்வாமி, ஸ்தானீகம் தங்கமையங்கார் ஸ்வாமி, பாம்பே வி. வி. ஐயங்கார் ஸ்வாமி, மதுரை வித்வான்கள் வானமாமலை வித்வான்கள் போன்ற மத்யஸ்த மஹானுபாவர்களை எது கொண்டு தூஷணைக்காரர்களென்று தூஷிக்கிறார்? இதற்கு பதில் அவசியம் வெளிவரவேண்டும். அப் பெரியார்களை நான் தூஷகர்களாக எழுதவில்லை யென்பரேல், பின்னை அணிகலன் திவ்ய க்ரந்தத்தை எது கொண்டு தூஷணைப் புத்தக மென்றீர்? என்கிற கேள்வி பிறந்தே தீரும்.

38. வேஷாடசர் சில பெரியார்களை மிகவும் அநாவச்யகமாக "மோசகார வேஷதாரி குமதிராஜர்கள்" என்று சரமாரியாக தூஷித்தெழுதினர். அது தகாதென்று அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் விஞ்சிமூர் வித்வான் ஸ்வாமியே இவர்க்கு (அணிகலன் பக்கம் 31ல்) இதமுரைத்திருக்கிறார். இதற்காகவா அவரை தூஷணைக் காரரென்று தூஷிப்பது. அந்த வித்வான் ஸ்வாமியே இந்த வேஷாடசர் எழுதினது ஸரி யென்று ஒருவரி யெழுதியிருந்தாராகில் அப்போது அவரைத் தலைமேல் கொண்டு கூத்தாடுவரிவர். மத்யஸ்தர்களான மஹான்கள் உண்மையை உள்ளபடி நிரூபித்துத் தெரிவித்த அபிப்ராயத்தில் குறை கூற இவர்க்கு என்ன அதிகாரம்? "ஸகல மஹான்களும் ஏககண்டமாக இப்படி அபிப்ராயப் படுகிறபடியால் அதற்கு மாறான அடியேனது அபிப்ராயத்தைத் திருத்திக் கொண்டேன்" என்று பிரசுரஞ் செய்வதோ, அதற்கு லஜ்ஜையாயிருந்தால் வாளா கிடப்பதோ, அல்லது அந்த வித்வான்களுக்கு மேற்பட்ட ஸுப்ரஸித்த வித்வான்களைக் கொண்டு தம்முடைய கொள்கையை நிலை நிறுத்தப் பார்ப்பதோ, அதவா அந்த வித்வான்களையே அடிபணிந்து 'இதை விமர்சிக்க வேணும், இதைப் பராமர்சிக்க வேணும்' என்று விநயமுடன் வேண்டிக் கொள்வதோ, இவற்றிலொன்று செய்திருக்க வேண்டுவதன்றோ யோக்யமான செயல். அதை விட்டு உலகையெல்லாம் நிந்திப்பதென்று இவர் தீக்ஷை கொண்ட விதனால் என்னாகும்?

39. உலகத்தில் ஸதீமணிகளாயிருக்கின்ற குலமாதர்கள் ஒரு மாதரைப் பற்றியும் ஒன்றும் வாய்திறவார்கள்; ஸ்வைரிணிகளென்று பேர்பெற்ற பெண்டிர்களே உலகி

ளுள்ள பதிவ்ரதைகளை யெல்லாம் ஸ்வைரிணிகளென்று பழிப்பது எங்குங் கண்டவியல்பு. அதுபோலவே இவர் மஹான்களை யெல்லாம் தாம் சரமாரியாக நிந்தித்துக் கொண்டு, யதார்த்தத்தை உலகுக் குணர்த்தியிருக்கின்ற பெரியார்களுக் கெல்லாம் தூஷகர்களென்று ஒரு பெயரிட்டு வைப்பது என்னயோக்யதை யென்பதை யோக்கியர்களே விமர்சிக்க வேணும். இவர் கோரமாதவஞ் செய்தாலும் இவருடைய கொள்கையை உகந்து போற்ற ஒரு வித்வானும் முன் வரமாட்டா ரென்பது சிலாலிகிதம். இவருடைய ப்ரவ்ருத்தியைக் கண்டித்து இவர்க்கே பல மஹான்கள் ஹிதோபதேசமாக எழுதுகின்ற பத்திரிகைகளை இவர் மறைத்திட்டாலும் அவை வெளிவராமற் போகாது. இன்னுமோராண்டு வரைக்குமாவது அப்படிப்பட்ட ஹிதோபதேச பத்திரிகைகள் வெளிவந்து கொண்டேயிருக்குமென்கிற ஸத்யத்தை யாவரும் காணப் போகிறீர்கள்.

## 5. விவாதநிதாந விமர்ச ரஹஸ்யம்.

40. பார்த்தரஹஸ்யம் அச்சிட்டவகையில் இருவர்க்கும் விவாதமுண்டானதாக இருவருடையவும் எழுத்திலிருந்து ஸ்பஷ்டமாக விளங்குகிறது. அஷ்டாத்யாயி பாரா 86ல் "புஸ்தக ப்ரசுரகர்த்தாக்களின் பெயரையும் இடத்தையும் புத்தகத்தின் முடிவிலும் டைடல் தாளிலும் போடுவது வழக்கமேயல்லது புத்தகத்தின் இடையிடையிலும் போடுவது இது வரை எங்குங்கண்டதில்லை; இமவந்தந் தொடங்கி இருங்கடலளவுமுள்ள நாடுகளில் ஒரு நாட்டிலும் காணாத அதிசயமாக புத்தூர்ஸ்வாமி த்வயப்ரகரணம் முடிந்து சரமச்லோக ப்ரகரணம் தொடங்குமிடையில் ஸகலஸ்வாமிகளும் விவேகிகளும் அருவருக்கும்படி அச்சிட்டவர்பெயர் அச்சுக்கூடப் பெயர் இவற்றைநுழைத்து அச்சிட்டார்" என்று காட்டப்பட்டிருக்கிறது. இந்த அஸங்கதச் செய்கைக்கு ஷோடசர் (பாரா 29ல்) பதிலெழுதுகிறார்—"திருப்பதிமுதல் திருப்புல்லாணி வரையிலுள்ள நாடுகளில் காஞ்சியென்று ஒரு நகரிருக்கிறது. அதிலிருக்கும் P. B. A. ஸ்வாமி பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவவுரையில் பூர்வசதகம் முடிந்தவுடன் தம்முடைய விருதுகளுடன் பெயரை அச்சிட்டுக் கொண்டிருக்கிறார். அவரைப் பின் பற்றியே நாமும் த்வயப்ரகரணமுடிவில் போட்டோம்" என்று.

41. இந்த பதில் அணுமாத்திரமாவது பொருந்துமாவென்று ஒவ்வொருவரும் பார்க்கலாம். ஸ்ரீரங்கராஜஸ்தவத்திற்கு உலகம் போற்றநின்ற வியாக்கியானத்தை யருளிச் செய்தவர் ஸ்ரீஸ்வாமி. அந்த வியாக்கியானத்தின் ஒருபகுதி (அதாவது பூர்வசதகம்) முதலில் அச்சிட்டு முடிக்கப்பட்டது. [பிறகு இரண்டு வருஷம் கழித்து உத்தரசதகவியாக்கியானம் அச்சிட ஆரம்பிக்கப்பட்டது. அதைப்பற்றி விஷயமில்லை.] முடிந்து வெளிவந்த பகுதியில் வ்யாக்யாந கர்த்தாவின் நாமாங்கனம் உள்ளதென்றால் இதில் யாராவது ஈஷத்தாவது அநௌசித்யம் சங்கிக்க முடியுமா? ஸ்ரீபாஷ்யத்திலுள் எத்தனையிடங்களில் பகவத்ராமாநுஜ நாமாங்கன முள்ளது தெரியுமோ? ரஹஸ்யத்ரயஸாரத்தில் எத்தனையிடங்களில் வேதாந்தாசார்ய நாமாங்கன முள்ளது தெரியுமோ? ப்ரகரணாவஸாந பரிச்சேதாவஸாநங்களில் க்ரந்தகாரருடைய நாமாங்கனம் செய்வது அவிகீதமாக எங்குங்கண்ட விஷயம். இவர் பார்த்த ரஹஸ்யத்திற்குக் கர்த்தாவாயிருந்தால் ஒவ்வொரு பாராவின் முடிவிலுங்கூட நாமாங்கனம் செய்து கொள்ளலாமே. அதை ஆக்ஷேபிப்பாருண்டோ? ஈயடித்து அச்சிடுகிற ஹோதாமாத்திரத்திற்கு மத்யே நாமாங்கனம் க்ரந்தகௌரவத்திற்கு மஹத்தான அவத்யம் என்பதை உலகமெல்லாம் உரைக்குமே. அச்சுக்கூடமேற்பட்ட நாள்முதல் இதுவரையில் ஒரு சிறு புத்தகமாவது இப்படியெடுத்துக்காட்ட முடியுமோ? வக்கீலென்று பேர்வஹிக்குமிவர் எதற்கு எது பதில் சொல்லுகிறாரென்று பாருங்கள். இதற்குமேல் இவர் என்ன பேசவருவரென்றால், 'ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீரங்கராஜஸ்தவவியாக்கியானமும் ஸ்ரீபாஷ்யமும் ஸமமோ?' என்று ஏச வருவர். அதற்குபதில் பேசக்கடமைப்பட்டவர்கள் மத்யஸ்தர்களேயாவர். க்ரந்த கர்த்தா என்கிற அம்சத்தினால் ஸாம்யம்விவக்ஷிதமேயொழிய வேறொன்றினாலன்றென்பதை மாச்சரியமற்றவர்கள் உணர்வர்கள்.

# 6. ஸங்கீர்ண நாநாவிஷய ரஹஸ்யம்.

[இவ்வதிகாரத்தில் ஷோடசருடைய எல்லா ஊழல்களும் கண்ணாடிபோல் காட்டப்படும்.]—முக்கியமாகப் பதினாறு விஷயங்களில் ஷோடசருடைய பங்கம் நிரூபிக்கப்படும்.—

**42. (1)** ஷோடசத்தில் ஒருவிஷயம் அடிக்கடி காட்டப்படுகிறது. அதுவே அவரால் தமக்கு வெற்றிக்கொடியாகவும் அபிமானிக்கப்பட்டிருக்கின்றது. (அதாவது,) ஸ்வாமியின் அஷ்டாத்யாயியில் பாரா 38ல் பெரும்பொய்கள் எழுதப்பட்டிருப்பதாக 15 தடவை யெழுதியுள்ளார். அஷ்டாத்யாயிக்கு மதிப்புரை கொடுத்த மஹநீயர்களெல்லாரும் அந்த 38-ஆம் பாராவின் பொய்ம்மையை ஆராய்ச்சி செய்யாமலே ஸ்வாமியின் வாக்கை வேத வாக்காகக்கொண்டு புகழ்ந்து வெளியிட்டு விட்டார்களென்றும் எழுதுகின்றார். ரஹஸ்ய விவேகம் முதலான சில க்ரந்தங்களில் இல்லாத விஷயங்களைப் பொய்யாக எழுதிவிட்டார் ஸ்வாமி என்று அட்டஹாஸம் செய்கிறார். இவருடைய அபிப்ராயப்படி இங்கு எழுத வேணுமானால், P. B. A. ப்ரமித்து எழுதிவிட்டாரென்றோ, அந்த க்ரந்தங்களை ஆழ்ந்து பாராமல் எழுதிவிட்டாரென்றோ சப்தப்ரயோகம் செய்திருக்கவேண்டுமே யொழிய, பொய் யென்கிற வார்த்தைக்கு ப்ரஸக்தியே கிடையாது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருப்புல்லாணியையும் திருக்கோட்டியூரையும் பாடியிருப்பதாக வொருவர் எழுதியிருந்தாராகில் அவரைக்கண்டிக்க நினைப்பவர் இப்படி பொய்யாக வெழுதினாரென்று கூறிப்பழிக்கமாட்டார் ஒரு விவேகியும். ப்ரமித்தெழுதிவிட்டாரென்றோ, உட்புகுந்து பாராமல் எழுதிவிட்டாரென்றோ இப்படிப்பட்ட சொற்களையிட்டே கண்டிப்பர். எங்கும் கண்டறியாமலும் கேட்டறியாமலுமிருக்கிற கதைகளையொருவர் எழுதினால் 'பொய்யாக எழுதப்பட்டது' என்று பழிக்கத் தகுதியுண்டு. அச்சிடப்பட்டு வெளிவந்துள்ள புத்தகங்களிற்காணும் விஷயங்களை மாறுபாடாக வொருவரெழுதினால் அதைப் பொய்யாக எழுதினாரென்பது பேசவுமெழுதவும் தெரியாதாருடைய பேச்சேயாகும். இயற்கையான தௌர்ஜந்ய முடைமையே காட்டி நிற்குமிவ்வாசகம். இனி, ப்ரமித்தெழுதினாராகச் சொல்லவும் தகாது. கேண்மின்.

43. *ஸம்ஸ்ப்ருசந் ஆஸநம் சௌரேர் விதுரஸ் ஸ மஹாமதி:* என்கிற மஹாபாரதச்லோகத்தை யெடுத்து வியாக்யானம் செய்தருள்கின்ற நம்பிள்ளை முதலான பேராசிரியர்கள், விதுரர் தம்முடைய திருமாளிகையில் தாமிட்ட ஆஸனத்தைத் தாமே தடவித் தடவிப் பார்த்ததாகப் பொருளருளிச் செய்துள்ளார்கள். இவ்வர்த்தத்தை எம்பெருமானருளியதாகவும் பெரியவாச்சான்பிள்ளை காட்டியுள்ளார். நாம் காண்கிற மஹா பாரதத்தில் இப்படி பொருள் கூறுவதற்குச் சிறிதும் இடமில்லை யென்பதை மஹா பாரதத்தின் பலபதிப்புகளையும் பார்த்தவர்கள் திண்ணமாகச் சொல்லுகிறார்கள். இந்தச்லோக விஷயத்திற்கும் விதுரர் திருமாளிகைக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை யென்பதைக் காட்டுகிறார்கள். இதனால் ஆசாரியர்கள் பொய்யாக எழுதிவைத்தார்களென்றாவது ப்ரமித்தெழுதிவைத்தார்களென்றாவது சொல்லப் போமோ?

**44.** பெரியதிருமொழியில் (5-8-2) *வாதமாமகன் மற்கடம் விலங்கு......கோதில்வாய்மையினாயொடு முடனேயுண்பனான்* என்ற விடத்தில் இராமபிரானுக்கும் திருவடிக்கும் ஸஹபோஜனம் நடந்ததாக அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. இதற்குரிய ப்ரமாணத்தை ஆசார்யஹ்ருதயத்தில் "ஸம்யக்ஸகுண ஸஹபோஜநமும்" என்றவிடத்து வியாக்யானத்தில் மணவாளமாமுனிகள் "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம்" என்று எடுத்துக்காட்டியருளியுள்ளார். *ஏஷ ஸர்வஸ்வ பூதஸ் து பரிஷ்வங்கோ ஹநுமத:* என்று திருவடிக்குப் பெருமான் தந்த ஆலிங்கனத்தையே திருமங்கையாழ்வார் ஸாதிப்பதாகப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானித்தருளுகிறார். ஸாக்ஷாத் போஜநத்தையே சொல்லிற்றாகக் காட்டுகிற ஆசார்யஹ்ருதய வாசிரியர் திருவாக்கைக் கொண்டு, பெரியவாச்சான் பிள்ளை பொய்யாக எழுதிவிட்டாரென்றாவது ப்ரமித்தெழுதிவிட்டாரென்றாவது பேசப் போமோ? இப்படிப்பட்ட பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்தி

களோடு விகல்பிக்கலாம்படியுள்ள ஸ்வாமி ஸூக்திகளில் அவகாஹிக்கத் துறையறியாதாரும் அஸூயாளுக்களும் ஸ்வாமி பொய்யாக எழுதுகிறாரென்று பதினாயிரமுறை எழுதினாலும் பொய்யிலாத மணவாளமாமுனி புந்தியே புகலென்றிருக்கும் ஸ்வாமிக்கு அவத்யலேசமுமுண்டாகாதென்பது ஸத்யம். இதனை நன்கு விவரிக்கிறோம் காண்மின்.

45. 38, 57 என்கிற இரண்டு லக்கங்களுள் எது முற்பட்டது எது பிற்பட்டது என்பதை பாவிசர்களுமறிவர்கள். "விப்ரதிஷேதே பரம் கார்யம்" என்பது சாஸ்த்ரஜ்ஞர்கோஷ்டிகளில் ப்ரஸித்தமானது. 38-வது பாராவுக்கு அபவாதமாகவே 57-வது பாராவை ஸ்வாமியெழுதியுள்ளாரென்பது அநாயாஸமாக அறியக் கூடியது. அந்த 57-வது பாராவிலுள்ள வாக்கியங்கள் இவை—(அஷ்டாத்யாயி பக்கம் 18ல்—)

"பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததென்று கொள்ள வ்யபதிஷ்டரான ஒரு ஆசார்யருடைய திருவாக்கையும் காட்டமுடியாது. (வ்யபதிஷ்டரான) என்றது எதற்காகவென்னில்; மணவாளமாமுனிகளுக்குப் பிற்பட்டவர்கள் பலர் பலநூல்கள் பணித்துள்ளார்கள்; அவற்றில் பலவகைப்பட்ட ப்ரமப்ரமாதங்களை நாம்மாத்திரமேயன்று, உலகமெல்லாம் கண்டு கூறுகின்றது. இதனால் நாம் பெரியோர்களுக்குக் குறைகூறுகிறோமென்று ப்ராமாணிகர்கள் நினையார்கள்...........ப்ரமப்ரமாதங்கள் பூர்வாசார்யர்களிடத்தில் தலைகாட்டவும் மாட்டாமலிருப்பதாலன்றோ அவர்களுக்கேற்றம். அந்த ஆசார்யர்களுக்குள்ளும் மணவாளமாமுனிகளையொத்த ப்ராமாணிகர் நபூதோ நபவிஷ்யதி யென்றால் சில அஸூயுக்கள் வயிறெரிந்து நிற்கலாமேயல்லது வேறுண்டோ? அப்படிப்பட்ட பேராசிரியருடைய * முத்தும்மணியும் வயிரமும் நன்பொன்னும் தத்திப் பதித்தாற்போன்ற திவ்யஸூக்திகளிலிருந்தன்றோ கல்வெட்டாக நாம்விஷயநிரூபணம் செய்கிறோம்"—என்று.

அடுத்த 58-வது பாராவிலும்—"மணவாளமாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று ஸாமாந்ய சப்தத்தால் நிர்தேசிக்கமாட்டாரென்று கண்டறிந்து கூறினால் இதை ப்ரத்யவஸ்தானம் பண்ண விரும்புமவர்கள் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளையேயன்றோ தஞ்சமாகக் கொள்ளவேணும்" என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார் ஸ்வாமி. இந்த ஸ்ரீஸூக்திகளைத் திடமாகத் திருவுள்ளத்திலே பதியவைத்துக்கொண்டிருப்பர்கள், மஹான்கள். 38-வது பாராவில் ஸ்வாமி பொய்யுரை பகர்ந்தாரென்று ஷோடசர் ஸாராயிவெல்லாமொழியாமே வீதியாரவந்து இரவும் பகலும் பறையடித்தாலும் உண்மையறிந்த மஹாமதிகள் ஒருபோதும் கலங்கார்கள். ரஹஸ்யவிவேகம், அஷ்டச்லோகி வியாக்கியானம் முதலான க்ரந்தங்களை ஷோடசர் கனவிலுங் கண்டதில்லை. இவற்றை ஸ்வாமி தாமாகவே யெடுத்துக்காட்டியருளினர் மாமுனிகளுக்குப் பின்னானோர் எழுதியுள்ள இத்தகைய நூல்களில் நிலைமையை யாவரும் ஆராய்ந்து பார்க்கட்டுமென்றே ஸ்வாமி அவற்றை யெடுத்துக் காட்டினது. இங்குச்சிறு விஷயமொன்றே கேண்மின்:

46. ஆசார்யஹ்ருதயத்தில் (127) "நித்யசத்ரு விசிந்தகருமான" என்றுள்ள சத்ருக்நாழ்வான் விஷயமான வாக்கில், வியாக்கியானத்தில் "விசிந்தயந் என்கிறவசனம் இன்னவிடத்திலே யென்று த்ருஷ்டமாய்த்தில்லை; வந்தவிடத்திலே கண்டுகொள்வது" என்று மாமுனிகள் அருளியுள்ளார். * நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந்" என்று சத்ருக்நாழ்வான் கூறியதாக வால்மீகிபகவான் கூறியுள்ளதை நாம் ஸ்ரீராமாயணத்தில் கட்கூடாகக் காணுகிற்ப, ஸர்வஜ்ஞரான மாமுனிகள் அந்த ப்ரமாணமிருக்குமிடம் தமக்குத் தெரியவில்லை யென்றெழுதினதகொண்டு உடனே அவரை நிந்திக்கவேண்டியது தானோ ஷோடசஜ்ஞாநிகளுக்குப் பணி. மாமுனிகள் அப்படி ஸாதிக்கநேர்ந்த காரணத்தை ஸ்வாமி ஒரு நூலில் விரியவுரைத்தருளியே யிருக்கின்றார். ஒன்றுமறியாத யதாஜாதர்கள் மேலெழப்பார்த்து மேலான நிந்தைகளைப் பொழிவதனால் என்ன ஹானி?

47. (2) இனி, 'பச்சைப்பசும்பொய் பேசுகிறவர் ஷோடசரே' யென்கிற வுண்மையையும் இங்குப் பாரோரறியப் பகர்கின்றேன். 'இவை பொய்யல்ல, மெய்யே' என்று

மத்யஸ்தர்கள் உகக்க ஷோடசர் நிரூபித்துவிடுவரேல் இவர் சொல்வதெல்லாம் வேதவாக்குத்தானென்று நானே பறைசாற்றி இவர்க்கேயடியனாவேன்.

48. ஷோடசம் 74-வது பாராவில்—“பெரியவாச்சான்பிள்ளையென்று ஓரிடத்தில் குறித்துவிட்டு மற்றவிடங்களில் அவரையே ஆச்சான்பிள்ளையென்று குறித்தால் பாதகமில்லையென்கிறார் (P. B. A.) ஸ்வாமி; மாமுனிகளும் பெரியவாச்சான்பிள்ளை யென்று ஓரிடத்தில் குறித்து மற்ற விடங்களில் அவரையே ஆச்சான்பிள்ளை யென்று குறிக்கிறாரென்பதை 12-வது அத்யாயத்தில் காட்டினோம்”—என்றெழுதியுள்ளார். இதுதான் பெரும்பொய், முழுப்புளுகு. 12-வது அத்யாயத்திலும் கிடையாது, 22-வது அத்யாயத்திலும் கிடையாது, ஏழேழ் பிறவி தவம் புரிந்தாலும் அப்படிக் காட்டமுடியாது. 12-வது அத்யாயத்தை ஒவ்வொருவரும் புரட்டிப்புரட்டிப் பார்க்கலாமே. கண்ணாடிபோல் ஸ்வாமி யெழுதியிருந்த விஷயத்தில் இவர் அபார்த்தம் கொண்ட பெருமைதான் அங்கிருக்கின்றது. ஸ்வாமி எழுதியிருப்பது என்ன என்பதை இவர் அடியோடு தெரிந்துகொண்டவரு மல்லர், தெரிந்துகொள்ள முடியாதபடியோ, ச்ரமப்பட்டுத் தெரிந்துகொள்ளும்படியாகவோ ஸ்வாமி எழுதியிருக்கவுமில்லை. அதை அடியேனெடுத்துக் காட்டுகிறேன். ஒரு வ்யக்தியின் பெயர் பெரிதாக இருந்தால் அந்தப் பெயரை அடிக்கடி யெடுத்துக்காட்டவேண்டிய அவச்யமிருந்தால் முதல்தடவையில் பூர்த்தியாகக் காட்டிவிட்டுப் பிறகு சுருக்கமாகக் காட்டுவது க்ராந்திகஸரணி. இதைத்தான் ஸ்வாமி அஷ்டாத்யாயி 6-வது பாராவில் விரிவாக எழுதியுள்ளார். அதில் கடைசி பங்க்திக்கு முந்தின பங்க்தியில் “முதன்முதலாக” என்று ஸ்வாமி யெழுதியிருப்பது கண்ணுடையார் காணக்கூடியதே. ஸ்வாமி காட்டிய இந்த நியமம் தவறாமலேதான் மாமுனிகள் திருநாமங்களைக் குறித்தருளுகிறாரென்பது அசைக்க முடியாதது. பெரியவாச்சான்பிள்ளையையே ஆச்சான்பிள்ளையென்று மாமுனிகள் குறிப்பிடத் திருவுள்ளம் பற்றினாராகில் மேலே காட்டிய நியமம் வழுவாதபடி, முதன்முதலில் பெரியவாச்சான்பிள்ளையென்று குறித்துவிட்டுப் பிறகு ஆச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளை என்றே குறித்திருக்கவேண்டும். அப்படிக் கிடையாது. ஆதியிலிருந்தே ஆச்சான்பிள்ளை யென்றே பதினைந்துவிசை எழுதிவிட்டு இடையே ஓரிடத்தில் பெரியவாச்சான்பிள்ளை யென்று எழுதியிருக்கிறார். இதுவும் ஸ்வாமியெடுத்துக்காட்டினதேயொழிய இவரெடுத்துக் காட்டினதுமன்று. இவரேயெடுத்துக்காட்டினதென்று ஏறிட்டுக்கொண்டாலும், ஸ்வாமி தெரிவித்திருக்கிறமாதிரியே 12-வது அத்யாயத்தில் தாம் காட்டினதாக இவர் எழுதியிருப்பது முழுப்பொய்யேயாம். இதுதான் ப்ரக்ருதவிவாதத்தில் உயிரான விஷயமுமாதலால், இப்படி நன்கு நிரூபிக்கப்பட்ட பொய்யைமாற்றி ஷோடசர் மெய்யென்று ஸ்தாபித்து விடுவாராகில் இவருடையவாதமே ஸத்யமென்று தேறிநிற்கத் தடையேது? இது பேர்க்கவும் போகாத பொய்யன்றோ. இவ்விஷயத்தை நெஞ்சில் நன்கு தேக்கிக்கொள்ளுங்கள்விவேகிகாள்!.

49. இனி, இரண்டாவது புளுகு கேண்மின். பெரியாழ்வார் திருமொழியில் *மாற்றுத்தாய் சென்று* பாட்டின் வியாக்கியானத்தில் “பிள்ளையிட்டருளின வியாக்கியான ப்ரக்ரியை” என்கிற மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி கையிலங்கு நெல்லிக்கனியாக எடுத்துக்காட்டி அதன் ப்ரமேயத்தை விவரித்தருளியிருக்கவும், அதை ஸ்வாமி மறைத்திட்ட மருமம் தெரியுமோவென்று அடிக்கடி யெழுதுகிறார் ஷோடசர். இதைப்பற்றி ஸ்வாமியின் முப்பத்திரண்டு மொழிமாலையிலும் பன்னிருதிங்களநுபவத்திலும் விரிவு காண்க. ஆகவே இதுவும் உலகமறிந்த பொய். ஷோடசர்பால் இத்தகைய பச்சைப்பசும் பொய்கள் மற்றும் பலவுள. * மெய்பேராலும் பொய்வல்லன் * என்று நம்மாழ்வாரும், * அறிந்தறிந்தே யுன்றன் பொய்யைக் கேட்டு * என்று குலசேகராழ்வாரும், * பாம்பணையார்க்கும் தம்பாம்புபோல் நாவுமிரண்டுளவாயிற்று * என்று ஆண்டாளும், * புல்லாணி யெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே * என்று திருமங்கையாழ்வாரும் காட்டிய பொய்களை யெடுத்துப் பேசினோமாகில் நம்முடைய பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமெல்லாம் தொலையும். ஷோடசப் பொய்களைப் பேசினது இவ்வளவே போதும்.

50. (3) பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததேயென்று ஸ்வாமியும் தெரிந்து எழுதியிருந்து இப்போது அதைமாற்றிப் பிரசாரம் செய்வதற்குக் காரணம் தம்மோடு சேர்ந்த பணவிஷயமான விவாதமேயென்று பணப்பேய் பிடித்தவர்கள் பன்முறையும் எழுதலாம். சதுச்ச்லோகி வியாக்யானம் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததென்று ஆதிமுதலாகவே கிரஹித்து அப்படியே பிரசுரமும் செய்திருந்த ஷோடசர் "அது பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததன்று, நாயனாராச்சான்பிள்ளையே ஸாதித்தது, தவறுதலாக ப்ரசுரம் செய்துவிட்டேன், இதையாவரும் மாற்றிக்கொள்ளவேணும்" என்று வெள்காமல் வெளியிட்டிருக்கிறாரே, இதற்கு யாரோடு சேர்ந்த பணவிவாதம் காரணம்? என்று கேட்டால், இந்த ஜன்மத்தில் இவரால் வாய்திறக்க முடியுமா? மூன்று நான்கு மஹான்கள் கேட்டிருக்கிறார்களே இவரை; அஷ்டாத்யாயியணிகலனில் திருக்கோட்டியூர் ஸ்வாமியின் வியாஸத்தின் முடிவில் (பக்கம் 36ல்) "பிராமாணிகர்கள் ஒன்றேபொன்று கவனித்தால் போதுமானது. புத்தூர் வக்கீல் ஸ்வாமி தமது பத்ரிகையின் ஸர்வதாரி௵ மாசி௴ ஸஞ்சிகையின் ராப்பரில் எழுதியிருப்பதை யாவரும் பார்க்கலாமே. சதுச்ச்லோகீ வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததென்று முன்னே ஒரு பத்ரிகையில் தாமே எழுதிவிட்டாராம். அது தவறு என்பதை பிறகு தெரிந்துகொண்டு அநுதபித்தாராம். அது நயினாராச்சான்பிள்ளையருளிச்செய்ததேயொழியப் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததன்று என்று தாம் தெளிந்துகொண்டாராம். இப்படியே எல்லாரும் தெளிந்துகொள்ள வேணுமென்று இப்போது பிரார்த்திக்கிறாராம். முதலில் எதைக்கொண்டு இவர் பிரமித்தார்? பிறகு எதைக்கொண்டு ப்ரமம் நீங்கப்பெற்றார்? என்று கேட்டால் உண்மையையுணர்த்துவாரா இவர்? சதுச்ச்லோகீ வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததென்று 50, 60 வருஷ காலம் ப்ரமித்திருந்தாரென்பதை இனி இவர் ஒளிக்க முடியாதே; அந்த ப்ரமமேதானே பரந்தரஹஸ்யத்திலுமிவர்க்கு. ஒரு ப்ரமம் தொலைந்து மற்றொருப்ரமம் தொலையமாட்டாமைக்கும் இன்னமும் எதிரம்புநோக்க நினைப்பதற்கும் காரணமின்னதென்பதை ப்ராமாணிகர்கள் எளிதிலுணருவர்கள்" என்று இவ்வளவு விரிவாக எழுதப்பட்டிருந்தும் இதைப்பற்றி வாய்திறந்தாரோ இவர்? தேள் கொட்டின தஸ்கரன் வெளியேறினபிறகாவது வாய்விட்டலறுவன். அதுவும் முடியாதபடியாயிற்றிவர்க்கு. அந்ததிருக்கோட்டியூர் ஸ்வாமி ஸூக்திகளுள் ஒன்றுக்குமாத்திரம் ஷோடசர் பதில் எழுதியிருக்கிறார். அவர் "50, 60 வருஷகாலம்" என்று ஒன்றெழுதியிருந்தாரன்றோ; "எனக்கிப்போது 52 வயதே ஆகிறபடியால் 50, 60 வருஷ காலம் நான் ப்ரமித்திருக்கமுடியாது; 30, 40 வருஷகாலந்தான் நான் ப்ரமித்திருந்தேன், அதிககாலம் எழுதினது பிசகு." என்று ஷோடசர் காட்டியுள்ளார். இப்படிப்பட்ட பதில் தான் இவரால் எழுதமுடியும். "அதுவன்றோ உயிரானவிஷயம்; அதற்கு நாம் பதிலெழுதியாகவேண்டுமே" என்கிற சுணையில்லையே.

51. (4) ஷோடசர் தமது சுவடியின் தொடக்கத்தில் "பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை முதலிய" என்று ஆதிபதப்ரயோகம் பண்ணுகிறார். மேலே 76-வது பாராவிலும் முதலிய என்றே மழுப்புகிறார். இன்னின்ன க்ரந்தங்கள் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்தவையென்று நிஷ்களங்கமாய் நிர்ணயிக்கப் புகுந்ததாகக் காட்டிக்கொள்ளுமிடத்தில் முதலிய என்று மழுப்புவதைக் கண்டபோதே இந்த ஷோடசர் சிறந்த ஆராய்ச்சிக்காரரேயென்று யாவரும் மெச்சுவர்களன்றோ. சில பண்டிதர்களுக்கு இத்யாதிவைபோகமென்று விருதுண்டு; அதில் இவர்க்கும் பங்குண்டுபோலும்! வியாகரணத்தில் கணபாடங்களில் ஆக்ருதிகணமென்று ஒரு ஸங்கேதமுண்டு. அதை இங்குக் கொண்டால் அபஹாஸ்யமாகும். இன்னும் நமக்குத் தெரியாத க்ரந்தங்களும் [பெரியவாச்சான்பிள்ளை பணித்தவை] சில இருக்குமாகையாலே அவை ஆதிபத க்ராஹ்யமாகலாமென்று கருதி (முதலிய) என்றெழுதினேனென்பர். தெரியாமல் மறைந்துகிடக்கிற க்ரந்தங்களைப்பற்றி இப்போது விவாதம் யாதும் விளையவில்லை. அப்ரஸித்தமான ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் தனித்தனியே விசாரம் நடந்து நிர்ணயமாக வேண்டுமேயொழிய, முதலிய வென்றெழுதிவிட்டளவால், விசாரத்திற்கு வாராத க்ரந்தங்களுக்கு ஒரு நிர்ணயமும் விளையாதன்றோ. ஆகவே

"ப்ரதமகபள ஏவ மக்ஷிகாபாத:" என்றபடி ஆரம்பவார்த்தை முதற்கொண்டே அசடு சொட்டுகிறதென்று தலையெழுத்தே திடப்படுத்திவிட்டது.

52. (5) ஸ்வாமி டெல்லிக்கெழுந்தருளி அங்குச் செய்த வுபந்யாஸங்களில் ஸ்ரீபாஷ்யத்தைப்பற்றிப் பேசியிருந்ததை ஷோடசர் பத்ரிகையில் வாசித்தாராம். அதற்கு முன்பு ஸ்வாமியின் தூஷணைக்குத் தப்பினவர் ஸ்ரீராமானுஜரொருவரிருக்கிறாரென்று ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தாராம்; ஸ்வாமியின் டெல்லி யுபந்யாஸ விஷயங்களில் ஒரு விசேஷத்தைத் தெரிந்துகொண்டவுடனே ஸ்ரீராமானுஜரும் அண்ணஸ்வாமியின் தூஷணைக்குப் பாத்திரமாய்விட்டாரென்று தெரிந்துகொண்டாராம் ஷோடசர். இதை பாரா 22 ல் ஆச்சரியமாக எழுதுகிறார். இந்த ப்ரஸங்கத்தில், ஸ்ரீபாஷ்யகாரர் பாஷ்யத்தில் அப்படி ஸாதித்திருக்கிறார் இப்படி ஸாதித்திருக்கிறார் என்று வாய்காட்டுகிறார்; அந்தோ! இந்த வீணான நப்பாசை இவர்க்கு ஏதுக்கு?

53. டெல்லியில் ஸ்வாமி யுபந்யாஸங்களை ஆதரித்துக் கேட்டவர்களில் உண்மையான ஸ்ரீபாஷ்யாதிகாரிகளும் பலர் ப்ரஸன்னமாகி யிருந்தார்கள். அவர்களில் ஸ்ரீ.உ.வே. ஸர் எஸ். வரதாசாரியர் ஸ்வாமி (ரிடைர்ட் பெடரல் கோர்ட்டு ஜட்ஜ்) தலைவராயிருந்தவர். அவர் பரமானந்தமடைந்து முடிவுரை கூறிப் போற்றியிருந்ததையும் அதேபத்ரிகையில் ஷோடசர் படித்திருக்கிறார். அதைமறைத்தோ அந்தப் பெரியார்களையும் சேர்த்தோ தூஷிக்கக் கிளம்புகிறார். டெல்லி ஸதஸ்ஸில் ஸ்வாமி பேசிய தென்னவென்றால், எம்பெருமானாருடையவும் மணவாளமாமுனிகளுடையவும் ஒற்றுமை நயத்தை நிரூபிக்குமளவில் இருவருடையவும் க்ரந்தங்களிலுள்ள ஸ்ரீஸூக்தி மாதுர்யத்தை விரிவாக உபபாதித்து, "இதர பாஷ்யகாரர்களைப் பெயரிட்டெடுத்து தூஷிப்பது கிடையாது, விஷயவிசாரத்திலேயே செல்வதுதான் ஸ்ரீபாஷ்யகாருடைய இயல்பு" என்று பேசியிருந்தார். ஸ்வாமி இப்படி பேசியிருக்கக் கூடாதென்றும், ஸ்ரீபாஷ்யத்தில் சங்கராசாரியரை சரமாரியாக தூஷித்திருக்கிறபடியாலே அதை ஸதஸ்ஸில் எடுத்துச் சொல்லியேயிருக்க வேண்டுமென்றும், அப்படிச் சொல்லாததோடு ஸ்ரீபாஷ்யத்தில் தூஷணை கிடையாதென்றும் சொல்லியது மஹத்தான ஆசார்யத்ரோஹமென்றும் குமுறுகின்றார். ஸ்ரீபாஷ்யாதிகாரிகளில் தலைவரான ஷோடசரே அங்கெழுந்தருளி ஸ்ரீபாஷ்யம் தூஷணபுஞ்ஜமயமே யென்பதை ஸிம்ஹ கர்ஜனையுடன் உபந்யஸித்துப் பரிசு பெற்றுவரட்டும். ஸ்ரீபாஷ்ய ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் ஸ்வாமி யெடுத்துக்கழிக்கிற பூர்வபக்ஷங்கள் எந்த க்ரந்தத்திலுள்ளனவென்பதை மஹாவித்வான்களும் அநாயாஸமாகத் தெரிந்துகொள்ளகில்லாமல் தேடுகிறார்கள். அவர்களுக்குப் புத்தூர்க்கு வழி தெரியவில்லை போலும்; தெரிவிப்போம்.

54. (6) ஷோடசர், பாரா 29ல்—"பெரியவாச்சான்பிள்ளை 20 ரஹஸ்யங்களுக்குமேல் செய்திருக்கிறார் என்று கணக்கிட்டிருப்பதை P. B. A. ஸ்வாமி பொறுக்காமல்" என்றெழுதுகிறார். இது வாஸ்தவமே. எம்பெருமானாரிடத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் அபரிமிதமான பக்தியுள்ளது. "ஸ்வாமி தசோபநிஷத் பாஷ்யமெழுதினார், ஸஹஸ்ரநாம பாஷ்யமெழுதினார்" என்று சிலர் கூறினால் 'நம் ஸ்வாமிக்கு இது ஏற்றந்தானே, த்ரமிடோபநிஷத் பாஷ்யங்கூட ஸாதித்ததாகச் சொல்லுவோம்' என்று ஒரு பேதையனும் நினையான். உள்ள பெருமையைக் குறைத்தாலும் பொறார்கள், இல்லாததை ஏறிட்டுச் சொன்னாலும் பொறார்கள் விவேகிகள். ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியனோடு * செய்யதாமரைத் தாளிணை வாழித்திருநாமமும் நம்பெருமாளே ஸாதித்ததென்று ஒருவர் சொல்லவந்தால், மாமுனிகளுக்கு இதுவுமோ ரேற்றந்தானே யென்று பொறுத்திருப்பாருண்டோ? பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர வியாக்கியானத்தோடு, இராமாநுசநூற்றந்தாதி வியாக்கியானமும் ஸாதித்தார், உபதேசரத்தினமாலை திருவாய்மொழிநூற்றந்தாதி வியாக்கியானமும் ஸாதித்தார் என்றால் இந்த மஹாமேதாவி பொறுத்திருப்பர் அபரிமித பக்தியினாலே; மற்றையோர்க்கு அவ்வளவு பக்தி பரிபாகமில்லாமையினால் பொறுத்திருக்ககில்லாமல் பொறாமையே விஞ்சும்.

55. (7) மாம்பூவுக்கும் மாம்பழத்திற்குமுள்ள ஸம்பந்தம் போலேதான் பெரியவாச்சான்பிள்ளைக்கும் இவர்க்குமுள்ள ஸம்பந்தம்—என்பதை உலக முழுதுமறியும், இவருள்ளமுமறியும். பேராசிரியர்களோடு நமக்கொரு ஸம்பந்தமுள்ளதென்று ஆஹார்யமாக அபிமானிப்பதும் பரமஸௌக்ருத பீஜமே. அங்கவிதத்தில் இவரும் ஸம்பந்தத்தை எவ்வளவும் ஏறிட்டுக்கொள்ளலாம். பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் ஆரேனும் அவத்யம் கூறினால் அதைப்பரிஹரிக்க நினைக்கவும் இவர் அதிகாரியல்லரே. அதிகாரியேயென்பரேல் அஷ்டாத்யாயியணிகலனில் பக்கம் 35ல் * ப்ரியஃ ப்ரியாயார்ஹஸி * என்கிற பகவத்கீதா ச்லோகத்திற்கு ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தையநுஸரியாமல் சங்கரபாஷ்யத்தையநுஸரித்து சரணாகதி கத்ய வியாக்கியானத்தில் அர்த்தம் செய்திருப்பது எப்படி பொருந்துமென்றும், அரியன என்கிற மிகச்சிறுபாட்டத்தை யாரோவொரு வழிப்போக்கன் கொண்டதற்காகக் கூத்தாடுமிவர் இதற்கு நேர்நின்று பதில் சொல்லுவாராவென்றும் திருக்கோட்டியூர் ஸ்வாமி மடிபிடித்துக் கேட்டிருக்கிறாரே; அதற்குத் திடவடங்க பதில் எழுதிவிட்டல்லவோ ஷோடசர் மற்றொன்றில் கைவைத்திருக்கவேண்டும். 'பாபிகள் பெரியவாச்சான்பிள்ளையையே தூஷிக்க வந்துவிட்டார்கள்' என்று அத்யாய மத்யாயமாக இவர் நிந்தித்துக்கொண்டு போதுபோக்கலாமேயல்லது வேறு செய்யமுடியுமோ? ரந்த்ராந்வேஷிகளும் விமர்சகர்களும் இப்படி கேட்கக்கூடிய விஷயங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, பலபலவுள. இவை ஜிஜ்ஞாஸையா கேட்பதாகவோ ஜிகீஷயா கேட்பதாகவோ ஆசாரியர்களின் மீது கெடுதலான புத்தியால் கேட்பதாகவோ இருக்கட்டும் கேள்வி வந்துவிட்டால் சாந்தியுடன் ஸமாதானம் சொல்லித்தானே தீரவேண்டும். * அநுமுகமநீத்ய * என்னப்பட்ட பெருமை பெரியாழ்வார்க்கும் போலே தமக்கு முண்டாய்விடுமென்று ஷோடசர் கனுக்காண்கிறார் போலும். நம் பூர்வாசாரியர்களின் அருமருந்தன்ன திவ்ய ஸ்ரீஸூக்திகளின்மீது பிறர் அவத்யலேசம் கூறினாலும் உடனே அவர்களுக்குத் தக்கபதில் எழுதி வெளியிட்டுவிட்டல்லவோ நம் ஸ்வாமி வேறு பணியில் கைவைப்பது. ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளின்மேல் தூஷணாபாஸங்களை வெளியிட்ட ஸ்ரீமத் கோழியாலம் யதிகளும் அவருடைய பரிவாரங்களும் திக்கு நோக்கி தண்டன் ஸமர்ப்பித்துவிட்டு, "நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்து சோர்ந்து கைமறித்து நின்றனனே" என்ற பெரியாழ்வாருளிச்செயலை ஒருவாறு நினைப்பூட்டிக்கொண்டு நிற்கிறார்களென்பதைத் தென்னாடும் வடநாடும் தெள்ளிதாக அறியுமே. அப்படிப்பட்ட ஸ்வாமியை இந்த ஷோடசர் ஸகல பூர்வாசார்ய தூஷகரென்று, நித்யமும் ஒரு புத்தகம் கொட்டை யெழுத்திலச்சிட்டு ஊர்தோறும் வீதிதோறும் வீடுதோறும் தொங்கவிடட்டுமே.

56. (8) பாரா 79ல் ஷோடசர் எழுதுகிறார்—தாம் ஏதோ ஒன்றிரண்டு தவறுகள் செய்துவிட்டாராம்; அவற்றை யெடுத்துக்காட்ட ஸ்வாமி ஒருவரை ப்ரேரித்தாராம்; ப்ரேரிதரான அவர் எடுத்துக் காட்டுகிறாராம்; அதற்குத் தாம் பதில் எழுதுகிறாராம்—ஆகிலிருந்து தாம் பிறர்க்கே யுழைத்து ஏழையாய் விட்டாராம், சிலநாளாகவே ஸம்ப்ரதாய வழியில் ஸேவைபண்ணி வருகிறாராம்; அப்படிப்பட்ட தமக்குத் தவறுகள் ஏற்படுவது ஸஹஜந் தானாம்.

57. இதற்குச் சொல்லுகிறோம். இதை நைச்யாநுஸந்தானமென்று பிறர் எண்ணிக் கொள்ளட்டுமென்பது இவரெண்ணம். அது எப்படியாகவாவது இருக்கட்டும். நன்னூலாசிரியர் "தான்தற்புகழ்தல் தகுதியன்றே" என்று சொல்லிவிட்டு, உடனே ".....மன்னிய அவையிடை வெல்லுறுபொழுதினும், தன்னைமறுதலை பழித்த காலையும், தன்னைப்புகழ்தலும் தகும் புலவோர்க்கே" என்றார். அந்தக் கணக்கில் இவரிடம் சரக்குண்டானால் எடுத்துக்காட்ட வேண்டிய ஸமயமிது. வைதிகமார்க்கத்தில் நூதனப்ரவேசமுடைய யான் நேராக வொன்று மறியேனென்று சொல்லுவது அர்த்தமுடையதாயிருந்தால், உலகிலுள்ள பெரியார்களெல்லாரும்—உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களெல்லாரும் ஏகமுகமாக அஷ்டாத்யாயியணிகலன் மூலமாகவெளியிட்டிருக்குமபிப்ராயத்திற்கு மாறாக அவர்களை தூஷித்தெழுத நமக்கென்ன அதிகாரமென்று அஞ்சிநடுங்கிக் கைகூப்பி வர்த்திக்க வேண்டுமன்றோ. அது இல்லையே. 'படிப்பது பாரதம், இடிப்பது கோயில்' என்றன்றோ சேஷ்டையுள்ளது.

55. (7) மாம்பழமுண்ணிக்கும் மாம்பழத்திற்குமுள்ள ஸம்பந்தம் போலேதான் பெரியவாச்சான்பிள்ளைக்கும் இவர்க்குமுள்ள ஸம்பந்தம்—என்பதை உலக முழுதுமறியும், இவருள்ளமுமறியும். பேராசிரியர்களோடு நமக்கொரு ஸம்பந்தமுள்ளதென்று ஆஹார்யமாக அபிமானிப்பதும் பரமஸௌக்ருத பீஜமே. அந்தவிதத்தில் இவரும் ஸம்பந்தத்தை எவ்வளவும் ஏறிட்டுக்கொள்ளலாம். பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் ஆரேனும் அவத்யம் கூறினால் அதைப்பரிஹரிக்க நினைக்கவும் இவர் அதிகாரியல்லரே. அதிகாரியேயென்பரேல் அஷ்டாத்யாயியணிகலனில் பக்கம் 35ல் * ப்ரியஃ ப்ரியாயார்ஹஸி * என்கிற பகவத்கீதா ச்லோகத்திற்கு ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தையநுஸரியாமல் சங்கரபாஷ்யத்தையநுஸரித்து சரணாகதி கத்ய வியாக்கியானத்தில் அர்த்தம் செய்திருப்பது எப்படி பொருந்துமென்றும், அரியனென்கிற மிகச்சிறுபாடத்தை யாரோவொரு வழிப்போக்கன் கொண்டதற்காகக் கூத்தாடுமிவர் இதற்கு நேர்நின்று பதில் சொல்லுவாரோவென்றும் திருக்கோட்டியூர் ஸ்வாமி மடிபிடித்துக் கேட்டிருக்கிறாரே; அதற்குத் தினவடங்க பதில் எழுதிவிட்டல்லவோ ஷோடசர் மற்றொன்றில் கைவைத்திருக்கவேண்டும். ‘பாபிகள் பெரியவாச்சான்பிள்ளையையே தூஷிக்க வந்துவிட்டார்கள்’ என்று அத்யாய மத்யாயமாக இவர் நிந்தித்துக்கொண்டு போதுபோக்கலாமேயல்லது வேறு செய்யமுடியுமோ? ரந்த்ராந்வேஷிகளும் விமர்சகர்களும் இப்படி கேட்கக்கூடிய விஷயங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, பலபலவுள. இவை ஜிஜ்ஞாஸயா கேட்பதாகவோ ஜிகீஷயா கேட்பதாகவோ ஆசாரியர்களின் மீது கெடுதலான புத்தியால் கேட்பதாகவோ இருக்கட்டும் கேள்வி வந்துவிட்டால் சாந்தியுடன் ஸமாதானம் சொல்லித்தானே தீரவேண்டும். * குருமுகமநதீத்ய * என்னப்பட்ட பெருமை பெரியாழ்வார்க்குப்போலே தமக்குமுண்டாய்விடுமென்று ஷோடசர் கனாக்காண்கிறார் போலும். நம் பூருவாசாரியர்களின் அருமருந்தன்ன திவ்ய ஸ்ரீஸூக்திகளின்மீது பிறர் அவத்யலேசம் கூறினாலும் உடனே அவர்களுக்குத் தக்கபதில் எழுதி வெளியிட்டுவிட்டல்லவோ நம் ஸ்வாமி வேறு பணியில்’ கைவைப்பது. ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளின்மேல் தூஷணபாஸங்களை வெளியிட்ட ஸ்ரீமத் கோழியாலம் யதிகளும் அவருடைய பரிவாரங்களும் திக்கு நோக்கி தண்டன் ஸமர்ப்பித்துவிட்டு, “நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்து சோர்ந்து கைமறித்து நின்றனரே” என்ற பெரியாழ்வாரருளிச்செயலை ஒருவாறு நினைப்பூட்டிக்கொண்டு நிற்கிறார்களென்பதைத் தென்னாடும் வடநாடும் தெள்ளிதாக அறியுமே. அப்படிப்பட்ட ஸ்வாமியை இந்த ஷோடசர் ஸகல பூர்வாசார்ய தூஷகரென்று, நித்யமும் ஒரு புத்தகம் கொட்டையெழுத்திலச்சிட்டு ஊர்தோறும் வீதிதோறும் வீடுதோறும் தொங்கவிடட்டுமே.

56. (8) பாரா 79ல் ஷோடசர் எழுதுகிறார்—தாம் ஏதோ ஒன்றிரண்டு தவறுகள் செய்துவிட்டாராம்; அவற்றை யெடுத்துக்காட்ட ஸ்வாமி ஒருவரை ப்ரேரித்தாராம்; ப்ரேரிதரான அவர் எடுத்துக் காட்டுகிறாராம்; அதற்குத் தாம் பதில் எழுதுகிறாராம்—ஆதியிலிருந்து தாம் பிறர்க்கே யுழைத்து ஏழையாய் விட்டாராம், சிலநாளாகவே ஸம்ப்ரதாய வழியில் வாஸனைபண்ணி வருகிறாராம்; அப்படிப்பட்ட தமக்குத் தவறுகள் ஏற்படுவது ஸஹஜந்தானாம்.

57. இதற்குச் சொல்லுகிறோம். இதை நைச்யாநுஸந்தானமென்று பிறர் எண்ணிக்கொள்ளட்டுமென்பது இவரெண்ணம். அது எப்படியாகவாவது இருக்கட்டும். நன்னூலாசிரியர் “தான்தற்புகழ்தல் தகுதியன்றே” என்று சொல்லிவிட்டு, உடனே “......மன்னிய அவையிடை வெல்லுறுபொழுதினும், தன்னைமறுதலை பழித்த காலையும், தன்னைப்புகழ்தலும் தகும் புலவோர்க்கே” என்றார். அந்தக் கணக்கில் இவரிடம் சரக்குண்டானால் எடுத்துக்காட்ட வேண்டிய ஸமயமிது. வைதிகமார்க்கத்தில் நூதநப்ரவேசமுடைய யான் நேராக வொன்றுமறியேனென்று சொல்லுவது அர்த்தமுடையதாயிருந்தால், உலகிலுள்ள பெரியார்களெல்லாரும்—உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களெல்லாரும் ஏகமுகமாக அஷ்டாத்யாயியணிகலன் மூலமாகவெளியிட்டிருக்கு மபிப்ராயத்திற்கு மாறாக அவர்களை தூஷித்தெழுத நமக்கென்ன அதிகாரமென்று அஞ்சிநடுங்கிக் கைகூப்பி வர்த்திக்க வேண்டுமன்றோ. அது இல்லையே. ‘படிப்பது பாரதம், இடிப்பது கோயில்’ என்றன்றோ சேஷ்டையுள்ளது.

58. (9) தம்மிடத்திலுள்ள தவறுகளை ஸ்வாமி ப்ரேரணையால் ஒருவர் எடுத்துக்காட்டி யிருப்பதாக எழுதுகிறாரே, எவ்விதமான தவறுகளை அவர் எடுத்துக்காட்டி யிருக்கிறாரென்று பார்ப்போம்; இவருடைய தவறுகளை யெடுத்துக்காட்டி யிருப்பவர் ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான் விஞ்சிமூர் ஸ்வாமியே. அவருடைய வியாஸம் அணிகலனில் பக்கம் 30ல் காணப்படுகிறது. இவருடைய தவறுகளை யெடுத்துக்காட்ட ஒருவரையொருவர் ப்ரேரிக்க வேணுமோ? ப்ரேரித்ததாகவே யிருக்கட்டும், விஷயங்களில் தவறுகளை யெடுத்துக்காட்டுவதானால் தாள் பற்றாது. இவர் அநாவச்யகமாக பாகவத தூஷணைகள் செய்வதாகிற தவறுகளையே அந்த வித்வான் தமது வியாஸத்தில் எடுத்துக் காட்டியுள்ளார். (அதாவது) மோசகார வேஷதாரிகுமதிராஜர்கள் என்றும் "திருமண் தரித்தவர்களெல்லாரும் திருமாலடியார்களல்லர்" என்றும் பலவாறு தூஷணைகளைப் பொழிந்திருக்கிறார் ஷோடசர் "நீறு செவ்வே யிடக் காணில் நெடுமாலடியாரென்றோடும்" என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தி காதில் விழுந்திருந்தால் இப்படி யெல்லாம் கைபோனபடி யெழுதி அபசாரப்படுவரா இவர்? இது கிடக்கட்டும்.

59. இக்காலத்திலுள்ள பூர்வசிகி ஸ்ரீவைஷ்ணவர்கள் ஞானமும் ஆசாரமும் அற்றவர்களென்று காட்டி உயர் குலத்தவர்களை யெல்லாம் தூஷித்துமிருக்கிறாரிவர். இப்படிப் பட்ட தவறுகளையே யெடுத்துக்காட்டியுள்ளார் அந்த வித்வான். இதற்கு ஷோடசர் எழுத வேண்டிய உண்மையானபதில் எதுவென்றால் "எனக்குத் தவறு நேருவது ஸஹஜந்தான்" என்றெழுதி யிருக்கிறாரே இதுவல்ல எழுதத்தக்கது. பிறர்க்கேய்மைத் தேறையானவர்கள் பலருண்டு. அவர்களில் ஒருவரும் இப்படி கடுமையாக பாகவதாபசாரப்படமாட்டார் பட்டதில்லை. இராமப்புத்தாக் இதற்குக் காரணம். "யானே யென்னை யறியகிலாதே அநியாயமாய் பாகவதாபசாரப்பட்டுக் கெட்டேன் கெட்டேன் கெட்டேன்" என்று கதறி யழுது அநுதாபத்தைக் காட்டி, விட்டேன் விட்டேன் விட்டேனென்று கைகூப்பி நிற்க வேண்டுமே யொழிய இந்தத் தவறு எனக்கு நேருவது ஸஹஜந்தானென்று எழுதுவது ஒரு காலும் தகாது. மேன்மேலும் தூஷிக்கவே நாடிக்கொண்டிருக்குமிவரிடத்தில் அப்படிப் பட்ட அநுதாப வார்த்தைகள் எப்படி ஆவிர்ப்பவிக்கும்?

60. (10) ஷோடசர் பாரா 10ல் "நாலாயிர வியாக்கியானமும் கரையானுக்கிரையாகி யிருந்தால் நலமாயிருக்குமேயென்று மாமுனிகளின் அன்பர்கள் சொன்னது உண்மையாயிருந்தால் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் தேனும்பாலு மமுதுமாக இல்லையென்றல்லவோ ஏற்படுகிறது. கரையானுக்கு இரையாகத் தகுந்தது என்றல்லவோ த்வனிக்கிறது" என்கிறார். இங்கு த்வனிக்கிறது என்றெழுதினது மிகவும் அசடு. ஸ்பஷ்டமாக விளங்குகின்ற விஷயத்தை த்வனிக்கிறதாக எழுதமாட்டார்களன்றோ அறிவுடையார். உண்மையில் த்வநியன்று, ஸுஸ்பஷ்டமான சிறந்த பொருளே அது. மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளின் முன்னே மற்ற ஸ்ரீஸூக்திகளெல்லாம் பகல் விளக்கும் மின்மினியுமானவையே யென்று உள்ளபடியெண்ணுமவர்கள் அப்படிச்சொல்லாமல் வேறு எப்படிச்சொல்லுவர்கள்? ஸாதுஸாத்விக ஸம்வாதத்தில் இதற்குப் போதுமான சாட்டையடிகளுண்டு; நாமும் சில தருவோம். கண்ணனைப் பெரியாழ்வார் * தேனிலினிய பிரானே!" என்கிறார். உண்மையில் தேனான கண்ணனை ஆண்டாள் * வெற்ற வெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே * என்கிறாள். இவ்வளவேயு மல்லாமல், * சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானை * என்று இராமபிரானுக்கே மனத்துக்கினியானென்று விருது சாத்துகிறாள். அந்த ஆண்டாளுக்குப் பக்கபலமாக நம்மாழ்வார் * உயிர்க்கது காலனென்று உம்மை யானிரந்தேற்கு, நீர் குயிற்பைதல்காள்! கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர் * என்கிற பாசுரத்தினால் கண்ணனது நாமத்தைக் கொலைசெய்யுங் கருவியாகக் கூசாது கூறினர்.

61. பட்டர் இதையெல்லாம் திடப்படுத்தி ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் *ம்ருதஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம் * என்று ஒரு சிலாசாஸனமிட்டருளினர். ஆகவிப்படி வேம்பேயாக

வளர்ந்து சொல்லும் நாமம் படைத்தவனைக் ஆழ்வார்கள் கோஷ்டியில் சேர்த்த கண்ணனையா நாம் தெய்வமாகவைத்துப் பூஜிக்கிறோமென்று ஆலோசிக்கவேண்டுமினி.

62. கிம்பஹுநா? ஸ்ரீவசநபூஷணத்தில் (424) "நித்யசத்ருவாயிறேயிருப்பது" என்ற சூர்ணையினால்—ஸ்ரீபரதாழ்வானையே தனக்கு உத்தேச்யமாகப்பற்றி அவனையல்லதறியாதே யிருக்கும் சத்ருக்நாழ்வான் பரதாநுவ்ருத்திக்கு விரோதியான ராமஸௌந்தர்யத்தை நித்ய சத்துருவாகவே நினைத்திருந்தானென்று நன்கு நிரூபிக்கப்படுகிறது. ஸ்ரீராம ஸௌந்தர்யத்தையா சத்துருவென்பது? என்று இவர் கிளர்ந்தெழவேண்டும். சத்ருக்நாழ்வானுடைய நிஷ்டைக்குச் சேர அதை சத்ருவென்னப் பொருந்துமென்று இனியாவது காலக்ஷேபங் கேட்டுத் தெளியலாம். அப்படியே * த்ராக்ஷா மதிக்ஷிபதி நிந்ததி மாகரந்த தாராம் ஸுதாரஸ ஜரீமதரீகரோதி * என்று கூடஸ்த ப்ரதிவாதிபயங்கராசார்யரால் வரவரமுநி சதகத்திலே அமுதிலுமாற்ற இனிதாகக் கொண்டாடப்பட்ட மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளையே தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமாகப்பற்றி * மற்றொன்றினைக் காணாவே யென்றிருக்கு மடியார்களுக்கு, பெரியவாச்சான்பிள்ளை ஸூக்திகள் மட்டுமல்ல, நம்பிள்ளைநஞ்சீயர் பட்டர் முதலானோருடைய ஸ்ரீஸூக்திகளுங்கூட வெறுமையே விளைவித்திருக்குமென்பதில் என்ன ஸந்தேஹம்? அந்த வரவரமுநிசதகத்திலேயே * அவாக்பூஷாஜுஷ்டை: * என்கிற ச்லோகத்திலே—மணவாளமாமுனிகள் தவிர மற்ற ஆசாரியர்கள் பிறந்து பயனென் கொல்? என்று வாய்விட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றதே. 'அது ஸம்ஸ்க்ருத ச்லோகம், எனக்குத் தெரியாது அது' என்பரேல் தமிழ்ப்பாசுரமே ஆச்சரியமானதொன்று காட்டுவோம்: "செற்றக்கமலவயல் சூழரங்கர்தம் சீர்தழைப்பப், போற்றித்தொழு நல்ல அந்தணர்வாழவிப் பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே" என்கிற அஷ்டதிக்கஜாசார்யப் பாசுரம் அழகிய மணவாளன் திருச்செவியில் அமுதப் பெருக்காகப் பாய்வது, உலகமெல்லாம் நித்யாநுஸந்தானம் செய்வது. இச்செய்யுளின் பொருளையறிவதற்கு இலக்கண விலக்கியப் படிப்பு வேண்டா; எளிதாக யாவருமறிவர். மணவாளமாமுனிகள் அவதரித்து ஸ்ரீஸூக்திகளையருளிச்செய்யாவிடில் நாலாயிர திவ்யப்ரபந்தமும் ஆற்றில்கரைத்த புளியேயாமென்று நிர்த்தாரணமாகச் சொல்லப்பட்டது.

63 ஆழ்வாரருளிச்செயல்களே ஆற்றில்கரைத்த புளியானால் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகள் கடலில் கரைத்த புளியாகவோ ஸமுத்ரத்தில் கரைத்த பெருங்காயமாகவோ ஆகவேண்டுமன்றோ. அப்படி யருளிச்செய்த ஆசாரியர்களையும் அந்த பாசுரங்களைக் கண்டபாடஞ்செய்து நித்யாநுஸந்தானம் பண்ணிவருகிற மஹான்களையும் தூஷித்துவிட்டுப் பிறகல்லவோ நம் ஸ்வாமியை இவர் தூஷிக்கவரவேண்டும்? "அதெல்லாம் அதிசயோக்தியாகச் சொன்னதத்தனை" என்பரேல் கரையானுக் கிரையாகலாகாதோ வென்ற இந்த வார்த்தையும் அவ்வணியிலேயே சேர்ந்ததென்று தேறி ஆறியிருக்கவன்றோ ப்ராப்தம். திருமங்கையாழ்வார் நந்திபுரவிண்ணகர மென்கிற நாதன்கோவிலில் ஈடுபட்டருளிச்செய்யும்போது "மண்ணிலிது போலுநகரில்லையெனவானவர்கள்தாம் மலர்கள்தூய் நண்ணியுறைகின்ற நகர்" என்று பாசுரம் பாடியுள்ளார்; இதைக்கண்டு, தென்திருவரங்கத்திற்காட்டிலுமா நாதன் கோயில் உயர்ந்தது, முத்திதரும் நகரேழில் முக்கியமாங்கச்சியைக் காட்டிலுமா இது சிறந்தது, வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பான வேங்கடத்திற்காட்டிலுமா இது மிக்கது, என்று சொல்லித் திருமங்கையாழ்வாரை நிந்திக்கவேண்டியதேயினி!

64. பெருமாள் திருமொழியில் * மீனோக்கு நீள்வயல் சூழ்வித்துவக்கோட்டம்மா * என்ற பாசுரத்திற்கு வியாக்கியான மருளிச்செய்யாநின்ற பெரியவாச்சான்பிள்ளை "கடலில் வாழும் மீன்களானவை, கடல் நீர்வற்றிப்போனால் நாம் திருவித்துவக்கோட்டு வயலிலே சென்று புகுந்து ஒரு குறையுமில்லாமே நெடுங்காலம் வாழலாமென்று நோக்கியிருப்பதாக" உலகிலுள்ள மேதாவிகளில் ஒருவருடைய மேதைக்கு மெட்டாததோர் பொருளைப் பணித்திருக்கின்றார். கடல் நீர் வற்றிப்போகுமென்று நினைக்க ஆஸ்பதமேற்

படும்போது, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்களெல்லாம் கரையானுக்கிரையாக வேணுமென்று நினைக்க ஆஸ்பதமேற்படாதோ? காஞ்சியிலே கொள்ளையிடக் காசியிலே கன்னமிட்டானென்கிற கதையாய் மஹான்கள் எழுதுகிற மஹாத்புத ஸூக்திகளில் வாய் வைக்கவும் வசை கூறவும் இவரார்கொல்? 'திருச்சியிலிருந்து திருவரங்கத்திற்கு நான்கு கல்லானால் திருவரங்கத்திலிருந்து திருச்சிக்கு எத்தனைகல்?' என்று கேட்க, எட்டுகல் என்று மயங்காதே விடையிறுக்கும் மேதாவிகளிலே தலைவரானவர்கள்..................என்று ஒருகால் திருக்கோட்டியூர் ஸ்வாமி பணித்ததே நினைவுக்குவந்து விலவறச் சிரித்திடுகின்றேன். இதைப்பற்றி **மாமுனிவன் மொழிமாண்பு** என்று தனியேயொரு திவ்ய க்ரந்தமவதரித்துளதென்று கேள்வி.

66. (11.) அஷ்டாத்யாயி 103, 104-வது பாராக்களில் ஸ்வாமி யெழுதியிருப்பது—பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததன்று என்கிறவொரு விஷயமும், அந்த ரஹஸ்ய க்ரந்தத்தை அச்சிடுவது ஸம்பந்தமாக நேர்ந்த விவாத விஷயமும் ஆக இரண்டு விஷயங்களுள் முந்தின விஷயத்தில் விசாரமே முக்கியமானது; பிறர் பதில் எழுத விரும்பினால் அவ்விஷய மொன்றிலேயே யெழுதத்தகும். பிந்தின விஷயத்தில் நாம் எழுதியவையெல்லாம் அநீதியான தென்று பிறர் பிரபலமாக நிரூபித்து விடுகிறாரென்றே வைத்துக் கொள்வோம்; அதனால் நமக்கு யாதொரு அவஜ்ஞையுமில்லை; ஆனால் பிறர்க்கு முந்தின விஷயத்தில் வாய்திறக்க லவலேசமும் இடமில்லாமையால் அதை விட்டு அச்சு ஸம்பந்தமான வார்த்தைகளையே திருப்பித்திருப்பி யெழுதிக்கொண்டிருக்க ப்ராப்தமாகும். அதில் பிறர் கூறுவதெல்லாம் ஸரி ஸரி ஸரி என்றே நாம்தலைதுலுக்கி இசைந்துகொள்வதாக வைத்துக் கொள்க. 'நானேதானாயிடுக' என்கிற சாஸ்த்ரமர்யாதைக்காகவன்றிக்கே உண்மையாகவே இசைந்திடுகிறோமென்றே கொள்க. ஆகவே பிந்தின விஷயத்தில் பிறர் கை செலுத்த நினைப்பது வேண்டா, பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததுதான் என்பதை ஸ்தாபிக்க விருப்பமும் துணிவு முண்டாகில் அதில் இறங்கி ப்ராமாணிகர்கள் உகக்க நிரூபணஞ் செய்து நம்மை அடிமைப்படுத்திக்கொள்வதே பாங்கு—என்று இவ்வளவு எழுதப்பட்டிருக்கின்றது. இதைப் பார்த்த பின்பும் பிரதானமான விஷயத்தை விட்டு அச்சு விஷயத்திலேயே ஆரவாரஞ் செய்ய ஒரு விவேகி இழிவரா? முக்கியமான விஷயத்தை முதலில் [illegible]காக நிரூபணஞ் செய்துவிட்டுப் பிறகு தலைவேதனைக் கதைகளையெழுதியிருந்தாலும் பொலிந்ததென்னலாம். சில பாமரர்களை வஞ்சிக்க ஸத்யமே தலையான தென்று உபந்யாஸித்து அஸத்யபுஞ்ஜமாக எழுதியுள்ளார். 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில்' என்பது ஒரு வசனம். 'ஒரு பொய்யை ஸ்தாபிக்க ஒன்பது பொய் சொல்லவேண்டும், முடிவில் அத்தனையும் பொய்யேயாம்' என்பது மற்றொரு வசனம். இவ்விரண்டு வசனங்களும் நம் ஷோடசர்பால் ஆச்சரியமாகத் தாண்டவமாடுகின்றன வென்பதை எளிதாக நிரூபிக்கிறேன் காண்மின். ஓரே உண்மையைக் கொண்டு ஒன்பதினாயிரம் பொய்களைப் பேர்த்து விடலாமன்றோ. கேண்மின். பரந்தரஹஸ்யமுத்ரணத்தில் பரிபூர்ண ஸ்வாதந்த்ரியம் ஷோடசருடையதாகவேயிருக்கட்டும், அச்சிட்ட பாரத்தை பரிசோதிக்க [ப்ரூப் கரெக்ஷன் செய்ய] காஞ்சீபுரத்திற்கு ஸ்வாமி ஸன்னிதிக்கு அனுப்பினதுண்டென்பதை "பட்ட குட்யாம் ப்ரபாதம்" என்கிற கதையாய் இவரே ஒப்புக்கொள்கிறார். பூர்த்தியாக அனுப்பவில்லை, கொஞ்சந்தானனுப்பினேனென்கிறார். அதிலுங் கொஞ்சமே அனுப்பினதாகவே வைத்துக்கொள்வோம். புத்தூர்ஸ்பீடத்திலே ஸ்ரீரங்கத்தில் எத்தனை வித்வான்களில்லை; கோவிந்தாசார் ஸ்வாமி ஸாதித்தாரென்று (பக்கம் 29 ல்) இவரே யெழுதுகிறாரே; அந்தஸ்வாமியும் மற்றும் பல பண்டிதர்களும் மலிந்த கோயிலில் ஒருவர்க்கு அனுப்பாமல் காஞ்சீபுரத்திற்கு ஸ்வாமி ஸன்னிதிக்கு எதுக்கனுப்பினாரிவர். 'அவர் விரும்பினார், அனுப்பினேன்' என்பர். தமக்கொரு ஸம்பந்தமில்லாமல் ஸ்வாமி எதுக்கு விரும்புவர்? யார் விரும்பினாலும் அனுப்பி விடுவரோ இவர்? ஸ்வாமியிடத்தில் அச்சுத்தாள்களும் முன்னடியே பெற்றுக்கொண்டேனென்று இன்னும் கூசாமலெழுதியுள்ளார். தடஸ்தர்கள் அதை யொருவிஷயமாகக் கொள்ளவேண்டா; ஸ்வாமியைப் பரிசோதகராக இவர் ஏற்றுக்

படும்போது, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்களெல்லாம் கரையானுக்கிரையாக வேணுமென்று நினைக்க ஆஸ்பதமேற்படாதோ? காஞ்சியிலே கொள்ளையிடக் காசியிலே கன்னமிட்டானென்கிற கதையாய் மஹான்கள் எழுதுகிற மஹாத்புத ஸூக்திகளில் வாய் வைக்கவும் வகை கூறவும் இவரார்கொல்? 'திருச்சியிலிருந்து திருவரங்கத்திற்கு நான்கு கல்லானால் திருவரங்கத்திலிருந்து திருச்சிக்கு எத்தனைகல்?' என்று கேட்க, எட்டுகல் என்று மயங்காதே விடையிறுக்கும் மேதாவிகளிலே தலைவரானவர்கள்...............என்று ஒருகால் திருக்கோட்டியூர் ஸ்வாமி பணித்ததே நினைவுக்குவந்து விலவறச் சிரித்திடுகின்றேன். இதைப்பற்றி மாமுனிவன் மொழிமாண்பு என்று தனியேயொரு திவ்ய க்ரந்தமவதரித்துளதென்று கேள்வி.

65. (11.) அஷ்டாத்யாயி 103, 104-வது பாராக்களில் ஸ்வாமி யெழுதியிருப்பதாவது—பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததன்று என்கிறவொரு விஷயமும், அந்த ரஹஸ்ய க்ரந்தத்தை அச்சிடுவது ஸம்பந்தமாக நேர்ந்த விவாத விஷயமும் ஆக இரண்டு விஷயங்களுள் முந்தின விஷயத்தில் விசாரமே முக்கியமானது; பிறர் பதில் எழுத விரும்பினால் அவ்விஷய மொன்றிலேயே யெழுதத்தகும். பிந்தின விஷயத்தில் நாம் எழுதுவதெல்லாம் அநீதியானதென்று பிறர் பிரபலமாக நிரூபித்து விடுகிறாரென்றே வைத்துக் கொள்வோம்; அதனால் நமக்கு யாதொரு அவஜ்ஞையுமில்லை; ஆனால் பிறர்க்கு முந்தின விஷயத்தில் வாய்திறக்க லவலேசமும் இடமில்லாமையால் அதை விட்டு அச்சு ஸம்பந்தமான வார்த்தைகளையே திருப்பித்திருப்பி யெழுதிக்கொண்டிருக்க ப்ராப்தமாகும். அதில் பிறர் கூறுவதெல்லாம் ஸரி ஸரி ஸரி என்றே நாம்தலைதுலுக்கி இசைந்துகொள்வதாக வைத்துக்கொள்க. 'தானேதானாயிடுக' என்கிற சாஸ்த்ரமர்யாதைக்காகவன்றிக்கே உண்மையாகவே இசைந்திடுகிறோமென்றே கொள்க. ஆகவே பிந்தின விஷயத்தில் பிறர் கை செலுத்த நினைப்பது வேண்டா, பரந்தரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததுதான் என்பதை ஸ்தாபிக்க விருப்பமும் துணிவுமுண்டாகில் அதில் இறங்கி ப்ராமாணிகர்கள் உகக்க நிரூபணஞ்செய்து நம்மை அடிமைப்படுத்திக்கொள்வதே பாங்கு—என்று இவ்வளவு எழுதப்பட்டிருக்கின்றது. இதைப் பார்த்த பின்பும் பிரதானமான விஷயத்தை விட்டு அச்சு விஷயத்திலேயே ஆரவாரஞ் செய்ய ஒரு விவேகி இழிவரா? முக்கியமான விஷயத்தை முதலில் அழகாக நிரூபணஞ் செய்துவிட்டுப் பிறகு தலைவேதனைக் கதைகளையெழுதியிருந்தாலும் தொலைந்ததென்னலாம். சில பாமரர்களை வஞ்சிக்க ஸத்யமே தலையானதென்று உபந்யாஸமாரம்பித்து அஸத்யபுஞ்ஜமாக எழுதியுள்ளார். 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில்' என்பது ஒரு வசனம். 'ஒரு பொய்யை ஸ்தாபிக்க ஒன்பது பொய் சொல்லவேண்டும், முடிவில் அத்தனையும் பொய்யேயாம்' என்பது மற்றொரு வசனம். இவ்விரண்டு வசனங்களும் நம் வேஷாடசர்பால் ஆச்சரியமாகத் தாண்டவமாடுகின்றன வென்பதை எளிதாக நிரூபிக்கிறேன் காண்மின். ஓரே உண்மையைக் கொண்டு ஒன்பதினாயிரம் பொய்களைப் பெயர்த்து விடலாமன்றோ. கேண்மின். பரந்தரஹஸ்யமுத்ராணத்தில் பரிபூர்ண ஸ்வாதந்த்ரியம் வேஷாடசருடையதாகவேயிருக்கட்டும். அச்சிட்ட பாரத்தை பரிசோதிக்க [ப்ரூப் கரெக்ஷன் செய்ய] காஞ்சீபுரத்திற்கு ஸ்வாமி ஸன்னிதிக்கு அனுப்பினதுண்டென்பதை "கட்ட குட்யாம் ப்ரபாதம்" என்கிற கதையாய் இவரே ஒப்புக்கொள்கிறார். பூர்த்தியாக அனுப்பவில்லை, கொஞ்சந்தானனுப்பினேனென்கிறார். அதிலுங் கொஞ்சமே அனுப்பினதாகவே வைத்துக்கொள்வோம். புத்தூர்ஸமீபத்திலே ஸ்ரீரங்கத்தில் எத்தனை வித்வான்களில்லை; கோவிந்தாசார் ஸ்வாமி ஸாதித்தாரென்று (பக்கம் 29 ல்) இவரே யெழுதுகிறாரே; அந்தஸ்வாமியும் மற்றும் பல பண்டிதர்களும் மலிந்த கோயிலில் ஒருவர்க்கு அனுப்பாமல் காஞ்சீபுரத்திற்கு ஸ்வாமி ஸன்னிதிக்கு எதுக்கனுப்பினாரிவர். 'அவர் விரும்பினார், அனுப்பினேன்' என்பர். தமக்கொரு ஸம்பந்தமில்லாமல் ஸ்வாமி எதுக்கு விரும்புவர்? யார் விரும்பினாலும் அனுப்பி விடுவரோ இவர்? ஸ்வாமியிடத்தில் அச்சுத்தாள்களும் முன்னடியே பெற்றுக்கொண்டேனென்று இன்னும் கூசாமலெழுதியுள்ளார். தடஸ்தர்கள் அதை யொருவிஷயமாகக் கொள்ளவேண்டா; ஸ்வாமியைப் பரிசோதகராக இவர் ஏற்றுக்

கொண்டதொன்றே இவருடைய அஸத்யம் முழுவதையும் முதலித்து விட்டதே. வக்கீலின் சாயத்தை வக்கீலன்றோ கண்டறிய வல்லவர்.

66. ஸ்ரீ உ. வே. ராவ்பஹதூர். மஹீஷி மாந்ய. மதுரை வக்கீல். R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமி ஒரு கொடியில் கண்டறிந்து வெளியிட்டிருக்கின்ற வுண்மையை உலகம் போற்றுமா, ஷோடசருடைய தலைவேதனை வார்த்தைகளை உலகம் கொள்ளுமா வென்பதை நானே எடுத்துரைக்க வேண்டும். "கம்பாவஸிடரெனப்படுகிற அச்சுக்கோப்பவர்க்கும் இவர்க்கும் ஒரு வாசி கண்டிலோமே!" என்கிறார் மற்றொரு அட்வகேட். இவ்விஷயத்தை இவர் இன்னமும் கிளறிக் கிளறித் தம்முடைய பொய்ம்மையை மூவுலகுமறிய முத்திரை செய்துகொள்ளட்டும்.

67. (12.) ஷோடசர், ஸ்வாமியினுடைய திவ்யக்ரந்தங்களையே இரவும் பகலும் சிந்தனை செய்பவராதலால், ஸ்வாமியின் ரசநாவைகரியை அநுகரிக்க ஆசைப்படுகிறார். ஒன்றே பாருங்கள். ஸ்வாமி எழுதியருளும் வாதகிரந்தங்களில்—"என்று கேட்டால் என்ன பதில் சொல்ல முடியும்?" என்று துணிந்து எழுதுவதுண்டு. ஸ்வாமி அப்படி யெழுதினாரானால் அந்த விஷயத்தில் "வில்லார் தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவலானோ?" (கம்பர்) என்னப்பட்ட எந்த தெய்வமும் யுககோடிஸஹஸ்ரமானாலும் பதில் சொல்ல முடியாதென்பது திண்ணம். இது ஸகல வித்வத்ஸாக்ஷிக அநுபவஸித்தம். *ஆபத்தகீர்த்திம ஸடா ஜடிலாம்ஸஸித்திः* என்றாப் போலே ஸ்வாமியை யநுகரிக்க ஆசை கொண்ட பௌண்ட்ரக வாஸுதேவர் பாரா 51 ல் "என்று கேட்டால் இவரால் என்ன பதில் சொல்ல முடியும்?" என்று உறுமினார். உடனே ஸ்வாமி உலகமுகக்க பதில் தெரிவித்திருக்கிறார் முப்பத்திரண்டு மொழிமாலையில். அதை அநுவதித்து அனைவர்க்கும் விவரிக்கிறேன்.

68. மணவாள மாமுனிகள் பெரியவாச்சான் பிள்ளையிடத்துள்ள கௌரவ புத்தியினால் அவரை நிர்தேசிக்க வேண்டுமிடங்களில் **பூர்வர்கள்—பூர்வர்கள்** என்றே ஸாதிப்பது வழக்கமென்று நான்கு இடங்களை யெடுத்துக் காட்டி நிரூபித்து, வேறு விதமாகச் சொல்ல முடியாமல் பெரியவாச்சான்பிள்ளையென்றே நிர்தேசித்தாகவேண்டிய இடத்தில் மாத்திரமே அப்படி ஸாதிப்பர் என்றும் கூறி, அதற்குரிய இடங்களையும் நிரூபித்திருந்தார் ஸ்வாமி அஷ்டாங்காயியில். அதில் பாரா 8 ல் "உபதேசரத்னமாலையில் திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக மூன்று பாசுரங்களில் பெரியவாச்சான்பிள்ளை யென்று பெயரையிட்டுக் கூறினாராயினும்......" என்றெழுதியிருந்தார். இதன்மேல் ஷோடசர் (பாரா 51 ல்) "உபதேசரத்னமாலையில் திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக ஓரிடத்தில் பெயரைச் சொல்லிக் குறித்தால் போதுமே; மற்ற இரண்டிடங்களில் **பூர்வர்கள்** என்றே மாமுனிகள் ஏன் குறிக்க வில்லையென்று **கேட்டால் இவரால் என்ன பதில் சொல்ல** முடியும்?" என்று பாடம் படித்துவிட்டார். இந்த முஸலகிஸலய மதி விலாஸத்தை என் சொல்லுவோம்! "திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக" என்றதற்கு இன்னது பொருளென்றே அறியாமல் அச்வமேதயாகம் பண்ண வருகிறாரந்தோ! உபதேசரத்தினமாலையில் எந்த மூன்றிடங்களில் பெரியவாச்சான் பிள்ளையென்று வாய்விட்டு அருளிச்செய்திருக்கிறாரோ அந்த மூன்றிடங்களிலும் வ்யக்தியின் உறுதியைத் தெரிவிக்கவேண்டியது அவச்யமாயிருக்கின்றது. (1) பிள்ளானும் நஞ்சீயரும் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் வாதிகேஸரிஜீயருமாகிற ஐவர் திருவாய்மொழிக்கு வியாக்கியானமிட்டருளினவர்கள் என்று முதலிடத்திலே கூறினர் மாமுனிகள். இங்கு பெரியவாச்சான்பிள்ளையென்று கூறாமல் பூர்வர்களென்று பொதுப்படக் கூறமுடியாது.

69. (2) நம்பிள்ளை நியமனத்தினாலே பெரியவாச்சான்பிள்ளை இருபத்தினாலாயிரப்படி யருளிச்செய்தாரென்று இரண்டாமிடத்திலே கூறினர்; இங்கும் பெரியவாச்சான்பிள்ளை யென்றுகூறாமல் வேறுவிதமாகக் கூறமுடியுமா வென்று பாருங்கள். (3) திருவாய்மொழிக்கு

மாத்திரமல்லாமல் நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியானமிட்டருளின பெரியவாச்சான் பிள்ளை என்று மூன்றுமிடத்திலே கூறினர். இங்கும் பெரியவாச்சான்பிள்ளை யென்று கூறாமல் வேறுவிதமாகக்கூற முடியாதென்று சொல்லவேண்டுமோ? "என்று கேட்டால் என்னபதில் சொல்ல முடியும்?" என்றவர் இப்போது தம்முகத்தை எங்கே கொண்டுவைத்துக்கொள்ளு கிறாரென்பதைப் பார்க்க வம்மின் புலவீர்!

70. (13.) ஆரியர்களே! 'ஷோடசர் விராலுக்குத்தகாத வீக்கமாக இங்ஙனே யெழுதினது, ப்ரக்ருத விவாதத்தில் இவர்க்கு நேர்ந்த பரிபூர்ண பங்கத்தையும் குன்றிலிட்ட விளக்காகக் காட்டிநிற்கின்றது. எங்ஙனே யென்னில்; சிந்தாமற் கொண்மினீர் தேர்ந்து. மேற் காட்டிய மூன்றிடங்களுள் முதலிடத்தில் மாத்திரம் பெரியவாச்சான்பிள்ளையென்று முழுப் பெயரை ஸாதித்துவிட்டு மற்ற இரண்டிடங்களில் **பூர்வர்கள்** என்று ஸாதிக்க முடியாவிட்டாலும் ஆச்சான்பிள்ளை யென்றே ஸாதித்திருக்கலாம்—ஷோடசர் நினைக்கிறபடி ஆச்சான் பிள்ளையென்றும் அவரைக்குறிப்பது உசிதமாகில்.

71. அப்படி குறிக்கவில்லை மாமுனிகள். முழுத்திருநாமத்தையே மூன்றிடங்களிலு மருளிச் செய்கிறார். ஏனென்று விமர்சிக்க அவச்யமேற்பட்டுவிட்ட திங்கு. ஆச்சான்பிள்ளை யென்று கூறினால், பெரியவாச்சான்பிள்ளையைக்காட்டிலும் வேறானவ்யக்தியே பொருளாகத் தேறுமே யல்லாது ஒருகாலும் பெரியவாச்சான்பிள்ளை பொருளாகமாட்டாரென்று மாமுனி கள் நிச்சயித்தே மூவிடங்களிலும் சோம்பாமல் பூர்ணமான நாமநிர்தேசமே செய்தருளி னர். இது காரணமன்று என்னவோ, வேறு காரணஞ் சொல்லவோ ஸர்வேச்வரனாலுமாகாது. தத்வத்ரய வ்யாக்யாந ஸூக்தியே ப்ரக்ருத ஸித்தாந்தத்தில் ப்ரபல ப்ரமாணமென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றினர்; அதிற்காட்டிலும் [இதுகாறும் விவரித்தபடி] உபதேசரத்தின மாலையே ஸர்வாத்மநா ப்ரபலதமப்ரமாணமென்று அவிசால்யமாக முடிக்கப்பட்டது. ஷோடசர், "என்று கேட்டால் இவரால் என்னபதில் சொல்ல முடியும்" என்று அகாண்டே உறுமினது பலபடியாலும் நிஜமுகபங்கத்திற்கே நிதானமாய்முடிந்தது என்பதை ப்ராமாணிகர்கள் திடமாகத் தெரிந்துகொள்வார்கள்.

72. (14.) இந்த ப்ரஸங்கத்தில் ஷோடசர் எழுதியுள்ள மற்றும் பல அஸம்பத்தோக்தி களையும் எடுத்துக் கழிப்போம். "பரந்த ரஹஸ்யத்தில் பூர்வர்கள் அருளிச்செய்தார்கள்" என்று சொன்னால், பின்புள்ளார்க்கு இன்னாரென்று விளங்காதாகையால் ஆச்சான்பிள்ளை யென்று பெயரையிட்டே சொல்லுகிறார், இதுவே சரியான காரணம்" என்கிறார் பாரா 51ல். இந்த காரணவாதம் ஒரு நொடிப்பொழுதும் நிற்கமாட்டாதது. கேண்மின். ஆச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மாமுனிகள் ஒரேதடவை யெடுக்கவில்லை, அஸக்ருத் எடுத்திருக்கிறார். இது மறைக்கமுடியாத விஷயம். உண்மையை எளிதாகத் தெரிந்துகொள்ள மாமுனிவன் மேற்கோள் விளக்கு அவதரித்து விட்டதே. அதைப்பார்த்தால் எத்தனைதடவை உதாஹரித் தருளி யுள்ளாரென்பது எளிதில் விளங்குமே. முதல்தடவையில் மாத்திரம் "பரந்தரஹஸ் யத்திலே ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தார்" என்றெழுதிவிட்டு மற்றை யிடங்களிலெல்லாம் "பரந்தரஹஸ்யத்திலே பூர்வர்கள் பணித்துவைத்தார்களிறே" என்றருளிச்செய்ய என்ன தடை? அந்த பூர்வர் இன்னாரென்று விளங்காமற்போக இடமேது? இதற்கு பதில்சொல்லத் திசைதொறும் விழிக்கவேண்டியதே புகலிவர்க்கு

73. (15) அடுத்தபடி யெழுதுகிறார் ஷோடசர்—"மாமுனிகள் பெரியவாச்சான் பிள்ளையைத் தவிர மற்றும் சிலரையும் பூர்வர்களென்னும் பதத்தினால் குறித்திருக்கிறா ரென்பதும் விளங்குகிறது" என்று. இன்னவிடத்திலே யென்று எடுத்துக்காட்டாமல் சூதாக எழுது வது வஞ்சகத்தில் சேரும். விவாதம் விளையாதபோது எப்படியும் எழுதலாம்; விவாதம் விளைந்தபின்பு ஒவ்வொன்றுக்கும் இடங்காட்டித் தீரவேண்டும். "பரந்த ரஹஸ்யம் தான் பணித்ததேயன்றிப் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததன்றிறே" என்று ஆச்சான்பிள்ளை

தாமே யருளிச்செய்திருப்பதாக விளங்குகிறது—என்று நாமும் எழுதிவைக்கத் தட்டில்லை யன்றே. எழுதிவைத்திட்டோம்.

74. மாமுனிகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளை யிடத்திற்போலவே நம்பிள்ளை பட்டர் நஞ்சியர் முதலானாரிடத்திலும் கௌரவபுத்தி யுண்டானமையாலே அவர்களையும் பெயரிட்டுச் சொல்லியிருக்கக் கூடாது என்று ஷோடசர் குசோத்யம் செய்திருப்பது கண்டவுடனே அரியபெரிய விஷயமொன்று நினைவுக்கு வருகின்றது; அதையுரைக்கேன் கேளீர். மணவாளமாமுனிகள் தத்வத்ரய வியாக்கியானத்திலே பலவிடங்களிலும் எங்கள் தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளையும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளோடொப்ப எடுத்திருக்கிறாரென்று ஒருவர் சொன்னார்; அதற்கு பதில் சொன்னவர்—தத்வத்ரய வியாக்கியானத்திலே தேசிகருடைய உக்திகளை யெடுத்துக்காட்டினது மூன்றிடங்களிலும் மாமுனிகளின் திருவாக்கு எப்படி யமைந்திருக்கிற தென்பதைச் சிறிது உற்று நோக்கவேணுமே. "ரஹஸ்யத்ரய ஸாரத்திலே ப்ரதிபாதிக்கையாலே" என்று இரண்டிடங்களில் ஸாதித்தார்; "இஹ ஜடாமாதிமாம் கேசிதாஹு: என்றிறே அபியுக்தருஞ் சொல்லிற்று" என்று ஒரிடத்திலே ஸாதித்தார். அருளிச்செய்தாரென்றோ அருளிச்செய்யப்பட்டதென்றோ ஒரிடத்திலும் ஸாதிக்கவில்லை—என்று தெரிவித்தார். அதுகேட்டு அவர் தலைகவிழ்ந்துநின்று, மணவாளமாமுனிகள், தேசிகர் தவிர வேறு ஆசார்யர்கள் விஷயத்திலும் "ப்ரதிபாதித்தார்" "சொன்னார்" என்று எழுதியிருக்கமாட்டாரா பார்ப்போம் என்று புத்தகமெடுத்துப் பார்க்கப்புகுந்தார். இங்கு ஆராயவேண்டிய விஷயம் எதுவென்று அவர் அறியப்பெற்றிலர். தேசிகரைப்பற்றி மாமுனிகள் பேசினவிடங்களில் அருளிச்செய்தாரென்கிற சொல்லமைப்பு ஒரிடத்திலாவது இருக்கிறதா இல்லையா என்று ஆராய்ந்துபார்த்து அது இருந்தால் அதையெடுத்துக் காட்டப்பார்க்கவேணுமே யொழிய, வேறு ஆசார்யர்களைப்பற்றிய சொல்லமைப்பில் "ப்ரதிபாதிக்கையாலே" என்கிற சொல் இருக்கிறதாவென்று தேடிப்பார்ப்பதில் கண் செல்லக்கூடாது. என்? பட்டரைப்பற்றி யெழுதுகையில் பன்னிரண்டிடங்களில் அருளிச்செய்தா ரென்றெழுதிவைத்து ஒரிடத்தில் ப்ரதிபாதித்தார் என்றோ சொன்னார் என்றோ எழுதிவைத்திருந்தாரானால் அதை யெடுத்துக்காட்டுவதில் அவர்க்கென்ன லாபம்! பிறர்க்கென்ன நஷ்டம்.!! இன்ன விஷயத்திற்கு இன்னவிதமான ப்ரதிபத்தியோ ப்ரத்யுத்தரமோ கொடுக்கவேண்டு மென்பதைச் சிறிதுமறியாமல் தலைகாலின்றி எதையோ எழுதிவைப்பதும் யார்க்குத்தான் இயலாது.

75. (16) ஷோடசர் 72-வது பாராவில் "இங்கு ஒரு விஷயத்தை எல்லாரும் அறியவேண்டும்" என்று எச்சரிக்கை செய்கிறார். அப்படியே எல்லாருமெழுந்துநின்று கேட்டு அறியுங்கோள். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி அயோத்யாராமாநுஜ ஜீயர்ஸ்வாமி வெளியிட்டருளின வடமொழி மயமான மந்த்ரார்த்த தீபிகைக்கு P. B. A. ஸ்வாமி அபிநந்தந பத்ரிகை மிக விரிவாகக் கொடுத்திருக்கிறாராம்; அந்த மந்த்ரார்த்ததீபிகையில் பரந்தரஹஸ்யட ஆச்சான்பிள்ளை ஸாதித்ததே யொழியப் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததன்று என்று எழுதப்பட்டிருப்பது ஸ்வாமிக்கு முன்பே தெரிந்திருக்கவேண்டுமாம்; அது தவறென்று அபிப்ராயப்பட்டே சென்ற வருஷத்தில் பரந்தரஹஸ்யத்தைப் பெரியவாச்சான்பிள்ளை பணித்ததாகவே பிரசுரித்திருந்தாராம் ஸ்வாமி; இப்போது அதை மாற்றுவதற்கு வேறு காரணமாம். ஆரியர்களே! காசுக்குமுதவாத இப்படிப்பட்ட அஸமஞ்ஜஸோக்திகளால் தான் ஷோடசர் யாவதாயுஷம் பத்ரபூரணம் பண்ணிக்கொண்டு கிடக்கவேண்டும். அந்த மந்த்ரார்த்த தீபிகையென்கிற க்ரந்தம் மொத்தம் 825 பக்கங்கள் கொண்டது. அது சிறந்த க்ரந்தமென்று அவதாரிகை யெழுதுவதற்கு க்ரந்தத்தினுள் ஒவ்வொரு வரியையும் ஒவ்வோரெழுத்தையும் பார்த்தேயாகவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. அப்படிப் பார்த்திருந்தாலும் இதம்பரமான ஆராய்ச்சி தோன்றுதவளவில் நன்மைதீமைகளின் நிச்சய ப்ரதிஸந்தானமுண்டாகவேமாட்டாது. ஒருவர் சிறந்தசோதிடர்; அவர் ஒரு பெரிய ஸந்நிதிக்குத் திருவாராதனகாரராக இருந்தார். அவருடைய தேவிகள் கருக்கொண்டு ப்ரஸவத்திற்காகப் பிறந்தகம் சென்று அங்கே ப்ரஸவித்து எமெட்டுநாளாயிற்று. அந்தச்செய்தி இவர்க்குத்

தெரியாமையாலே ஸந்நிதித் திருவாராதனம் க்ரமமாகச் செய்துவந்தார். ஒன்பதாநாளிரவு நீட்டுத்தெரிந்து மறுநாள் மாத்திரம் ஒதுங்கியிருந்து மறுநாள் திருவாராதனஞ் செய்யச் சென்றார். அப்போது ஒருவாதம் கிளம்பிற்று—இவர் சிறந்த சோதிடராகையாலே ப்ரஸவமான க்ஷணத்திலேயே இவர்க்கது தெரிந்திருக்கவேண்டும்; தெரிந்திருந்தும் நீட்டுகலந்தபடியாலே இவர்மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்ளவேண்டும் என்று. இதற்காக அப்போது எல்லாரிடத்திலும் கையெழுத்து வாங்கத் தொடங்கினார்களாம்; அதில் முதல் திருவெழுத்து சாத்தினவர் நம் ஜேஷ்டசரோயாம். இப்போ திவ்வளவே போதும்.

“ஓம் சாந்திச் சாந்திச் சாந்திஃ.”

ஆச்சான் பிள்ளையாருரஹஸ்யம் முற்றிற்று.